உ

# ஸ்ரீ குரு சரிதம்
# மஹாத்மாவின் மஹிமைகள்.

*இயற்றியவர்:*

B. V. வெங்கட்ராமய்யர்,
" குழந்தை விலாசம் "
*ஒற்றை வீதி,—வத்தலக்குண்டு.*

(இரண்டாம் பதிப்பு)
1963.

# நூன் முகம்.

'ஸ்ரீ குரு சரிதம், மஹாத்மாவின் மகிமை' என்னும் நூல் ஆரம்பத்தில் முதல் புத்தகமாக 1955-ல் என்னால் எழுதப் பெற்று திருவாரூர் எட்வர்ட் பிரஸ்ஸில் அச்சாகி வெளி வந்தது. தற்போது அச்சாகியிருக்கும் இந்த இரண்டாம புத்தகம் அநேகம் ஆண்டுகளுக்குப் பிறகு தற்போதுதான் எனது ஆப்த நண்பரும், மகாத்மாவின் சிறந்த பேரருளைப் பெற்றவருமான மதுரை ஸ்ரீ K. ராஜகோபாலன் அவர்களும், நெரிஞ்சிப்பேட்டை ஸ்ரீ செ. சுந்தரம் செட்டியார் அவர்களும் இப்பெரும் பணியை இவர்கள் வாயிலாக ஏற்று அச்சிட முன்வந்துள்ளார்கள். அவர்களது பேருதவிக்கு நான் எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

இந்நூலின் கண் உள்ள மஹாத்மாவின் மகிமைகள் இருபதும் இரண்டாம் புத்தகத்தில் இடம் பெற்றுள்ளன. இப்புத்தகத்தை அச்சிட்டு உதவிய நெரிஞ்சிப்பேட்டை ஆயிர வைசியாள் மடாலய தர்மகர்த்தாக்களுக்கு எமது நன்றி உரியதாகுக.

இப்புவியின் கண் ஸ்ரீ குமரேசனது திரு அவதாரமாய் ஆறுபடை வீடுகளிலும சாந்நித்தியமாய் நின்று அடியா ருக்கு அனவரதமும் அருள்புரிந்து வரும் எனது அன்பிற் சிறந்த பாட்டனாராகவும், ஞானசிரியராகவும, தற்காலம கோச்சடை சமாதியிலும், பற்பல ஜீவன் முக்தி க்ஷேத் திரங்களிலும் சமாதியாக கொழும்பிலும் சுருளிமலையிலு

மாக ஆகாச விருட்சத்தில் உறைந்தும், ஆஸியுலக மகனீய ராகப் பக்தர்கள் மூலம் சம்பாஷித்தும் தற்காலம் செய்தித் தாள்களின் மூலம் வெளியாகிவரும் உண்மைகள் யாவற்றின் மூலமாயும், லோக உபகாரார்த்தமாய் வேத வேதாங்கங்களில் பரம இரகசியங்களை உபதேசித்தும், சர்வ வியாபகமாய் நின்ற ஸ்ரீ குழந்தையானந்த மகா சுவாமிகள் அவர்களின் திருவடிகளே புகலிடமாகக் கொண்டு அவரது பேரன்பும் திருவருளும் சிறந்து விளங்குவோமாக !

குழந்தை விலாஸ், வத்தலக்குண்டு. } ரெகுபதி வெங்கட்ரமணன்,



# விஷய அட்டவணை.

# 1. குழந்தை வாக்கு.

———x———

எனது சக்ரோபாசனை காலத்தில் குருநாதன் கட்டளைப்படி விபூதியளித்தல் பலர்க்கும் உண்டு. இந்தப் பரோபகாரம் எவ்வித பிரதியும் கருதி நான் செய்வதில்லை. இதனை ஏற்போரது நம்பிக்கை காரணமாக தக்ஷிணா பரிகாரம் சித்திக்கக் காண்பேன். இதற்கு இராப்பகல் என்றது போன்ற கால நிர்ணயமோ மற்ற எவ்வித நிபந்தனையும் நான் ஆராய்வதில்லை. எவ்வித ரோகமாயினும், வேறெவ் வித பயங்கரங்களாகிலும், சர்ப்பாதி விஷ சம்பந்தங்களாகிலும் ஆண்டவன் திருநாமத்தால் அவர்கள் அடையும் சுகம், ஆண்டவனைச் சார்ந்ததே என்பதை நான் நன்கு உணர்வேன். நம்பி வந்தவர் நலமடைவர். இஃது நிதர்சனம். ஆண்டவன் திருவருளைப்பெற, அவர்தம் திருக்கோயிலை நாடிப் பொறு மையுடன் நடந்தேதான் மேலான அவர்தம் அன்பைப் பெறமுடியும். பொன்னைப் பொருளைபெறவோ, நீடிய ஆயுளைப் பெறவோ எதுவாயினும் சரியே, குருநாதராகிய நம் குழந்தை தெய்வத்தின் திருவாக்கு ஒன்றிலேயே யாவும் அமையும். சரீரியாயும், அசரீரியாயும் பகவானே எங்கும் வியாபகம். இதன் உண்மையை அடியிற்காணும் நிகழ்ச்சி அறிவுறுத்தும். ஒரு சமயம் மாலை நேரம் ஒருவர் என்னைத் தம் இல்லத்திற்கு வரும் வண்ணம் அழைத்தார். நான் எனது உபாசனையை முடித்துச் சுமார் ஏழரை மணிக்கு என்னை வேண்டியழைத்தவர் இல்லம் நோக்கிப் புறப்பட் டேன். அக்கால் ஓர் சிறுன் என்னை நோக்கி ஓடிவந்து "என் சக்கரத்தைக் கொடுத்துவிட்டுப் போ" என்பதாகப் பன்முறை கூவிச் சொன்னன். இதன் பொருள் அறியாது

"உன் சக்கரம் என்னிடம் இல்லை" என்று எவ்வளவு சொல்லியும் பயன்படவில்லை. அவனும் பிடிவாதம் செய்யலானான். முடிவில் குழந்தைகள் உருட்டி விளையாடும் ஓர் இரும்பு வளையம் தந்து அவனை யனுப்பிவிட்டு என்னை அழைத்தவர் இல்லம் சென்றேன். அந்தக்கிருகத்தின் நடையில் ஓர் சார் ஓர் வியாதியான ஸ்திரீ சாய்ந்தவாறு சயனித்திருந்தாள். கிருகத்தின் வாயிற்படி ஏறிய என்னை எவரும் மதித்து வரவேற்கவில்லை. ஆயினும் உள்ளே சென்ற நான் கிருகஸ்தரை நோக்கி, "இதோ வந்து விட்டேன். நான் என்ன செய்யவேண்டும் தெரிவியுங்கள்" என்றேன். அவர் தமது மனையாளின் தேகத்திலுள்ள நோயின் தன்மை பற்றி விஸ்தரித்துப் பஞ்சாட்சரம் அளிக்கச் சொன்னார். இடையே அவரது மனையாள் குறுக்கிட்டுக் கூறியதாவது "அடே நீயா எனக்குப் பரிகாரம் செய்ய வந்தவன்? போடா வெளியே" என்று அந்த நிலைமையில் வெகு மூர்க்கமாய் கனின்றாள். இந்தத் தம்பதிகளின் அபிப்ராய பேதமான நிலையை உணர்ந்த நான் சற்று நிதானித்து, யோசித்துப் பிறகு, அவரை வெளியே அழைத்துக கொஞ்சம் விபூதியளித்து, அந்தப் பெண்பால் அறியாமல் நீரில் கலந்து அளிக்கச் சொல்லி மீண்டேன். அற்றை நாள் கடந்து மற்றைநாட் காலை ஸ்நானம முடித்து ஆற்றிலிருந்து திரும்பிய நான் அந்தக் கிருகஸ்தரின் வீட்டு வாயிலில் கண்ட காட்சி என்னையே திடுக்கிடும்படி செய்துவிட்டது. என்னை வெறுத்து எனது பஞ்சாட்சரத்தை மறுத்துச் சீற்றம் கொண்ட அவரது இல்லக் கிழத்தி, இகலோக வாழ்க்கையைத் துறந்து காலகதி யடைந்ததாய் அறிந்தேன். அந்த மங்கை விபூதியளிக்கையில் மறுத்த மர்மமும், வீட்டினுள் பிரவேசிக்கும் பொழுதே கிருகஸ்தரது வரவேற்பின்மையும், ஆரம்பத்திலேயே "எனது சக்கரத்தைக் கொடுத்துவிட்டுப்போ" என்று என்னைத் தடுத்த அந்தக் குழந்தையின் வாக்கின்

போக்கும் அதன் பயனுக விளைந்த இந்த மரண பயங்கரமும், விதியின் விளையாட்டோ அல்லது தெய்வகதியோ யாதென்று உரைப்பது! மேற்குறிப்பிட்டுள்ள சம்பவத்தில் அக்குழந்தையின் வாய்மொழியே வாய்மை பெற்றவாறு காணுங்கால் அதுவும் அம்மங்கையின் விதி வழி வந்த சம்பவமாய்த் தோன்றினும் தெய்வத்திருவுள்ளமும், குழந்தை வாக்கும் ஒன்றென்றே நான் முடிவு செய்து, அன்று முதல் ஆண்டவன் கட்டளையின்றி, நான் வெளியேறி விபூதியளித்ததில்லை.

---

## 2. ஜோதிச் சுடர்.

ஆறு திருப்பதிகளுள் ஒன்ருகியும் குழந்தை முருகேசன் தமது பூதப் படைசூழ தேவசேனபதியாய் யுத்த சன்னத்தராக வந்து தங்கிய மேன்மைத் தலமாகியும், சகல பாபங்களையும் போக்கும் நெடுங் கடல் அலைமோதி ஒலித்து ஆரவாரம் புரிவதாயும், திவ்விய க்ஷேத்திரமாகியும், குமரகுரு தாஸ சுவாமிகள் குழந்தை வடிவேலனைத் தரிசன சேவை பெற்ற திவ்விய தலமாகியும், குதிரை முகத்தை யுடைய பெண்ணரசி பெண்முகம் பெற்ற விமோசன அருட்பதியாகியும், அருணகிரி வள்ளற் பெருந்தகையின் அருள் சுரந்த திருப்புகழ்ப் பாடல்கள் அநேகம் பெற்றதாயும், சூரபன் மனுதியரின் வரலாற்றைச் சாங்கோபாங்கமாகக் கேட்டு வியாழ குருவை மெச்சி வியந்து வீரபாகு தேவரைத் தூது விடுத்துத் தங்கிய மூன்ரும் படை வீடாயுமுள்ள திருச்செந்தில் பதிக்கு அவர்தம் ஆணையின்படி ஒரு சமயம் நான் சென்றிருந்தேன். சர்வான்மாக்களும் தன்னுள் பெற்ற தனிப் பெருஞ் செல்வனது இணையடிகளே தஞ்சமென்று நாடித் தேடிவந்து முத்தாடுவது

போலுங்காண, அற்புதக் காட்சியாயிருந்தது. ஆலயத் திருமதிலை மோதிய இந்த அலைகடலின் ஆரவாரம்.

வெற்றி முழங்கும் இவ்வேளையில் மூழ்கிக் குளித்து சகல பாபமும் நீங்கச் சங்கற்பித்து கரையை நோக்கிக் கடுகி நடந்தேன். ஆங்குப் பாறையில் ஓர் சார் வைத்து **அங்க வஸ்திரம்** அருகில் நெருங்கிப் பார்க்க அதனைக் காணவேயில்லை. அலைக்கரம் பற்ற அஃது அகன்றதா யறிந்தேன். மற்றோர் சாரில் நான்வைத்த தொகையைச் சூழ்ந்து **நின்ற சிறுர் அறுவரைக்கண்டு** ஆங்குக் கலங்கி ஓடினேன். ஒரு சிலதப்படி **நடந்த சிறுரும், மறைந்து மாயமாய் ஏகினர்.** அப்பால் இந்தவிதமாய் இருந்த நிலைமையை, **"ஷண்முக விலாச"**ச் சன்னதி முன்னர் இருவர் கண்டு என்னை விசாரித்தனர். அவர்களில் ஒருவர் **அம்பலவாண பிள்ளை** என்பவர். அவர் அந்த ஜில்லாவைச் சேர்ந்தவர்தான். முருக வேலுக்குகந்த திருப்பணிகளில் ஈடுபட்ட சிறந்த பக்தர். மிக மிக உயர்ந்ததும், சிறந்த பெயர் பெற்றதும், இணையற்றதும், விலைமதிப்புக் கடந்ததுமான, அரசச் செல்வர்களே வாங்கி யணியத்தக்க, நறுமணங்கமழும் களப கஸ்தூரியாதிவகைகளும், பனிநீர்வகைகளும், அத்தர் தினுசுகளும், அகில் சந்தனாதி வகைகளும், உயர்ந்த பச்சைக் கற்பூர குங்குமப்பூ வர்க்கங்களும், சிறந்த சிலா சத்துக்களுடன் மேனாட்டு எசன்ஸ் ரகங்களும், ககனம் பரவிக்காலும் கண்ணிய மிருந்த மண்ணரசர் அரண்மனையிற் சிறக்கும் அரிய வகையான பத்தி வகை பலவும் சூழச் **சுகந்த திரவியங் களால்** நிறைந்த **பல கடைகள் பம்பாயிலும், கொழும்பிலும்,** தமது ஜில்லாவிலும் பல கிளைகள் ஏற்படுத்தி நடாத்தித்

தலைமை பெற்று, "பாம்பே வல்லவை அத்தர் வாலா" வ ந. ச. அம்பலவாண பிள்ளை எனப் பேரும் பிரக்யாதியும் பெற்றவர். சதா செந்தில் முருகனின் சிந்தை மகிழச் சன்னதியில் காத்திருந்து இவ்வகைச் சிறப்புக்களால் அவர் தமைப் பல்லாண்டுகளாகப் போற்றி வழிபட்டு வந்தார். பிரதி தினமும் நூற்றுக்கணக்காய்ச் செவ்விள நீர்க் காய்களைக் கொண்டும் பரிமிள மிகுந்த சந்தன கந்தங்களாலும் ஒயாது, சலியாது உயர்தர அபிஷேகம் புரிந்து கந்தனது சிந்தை சதாமகிழ் பூக்கப் புரிந்துவந்தார். இவரையே முதன் முதலாக நான் செந்திப்பதியில் கண்டு நேசம் பூண்டது. இணையற்ற அன்புகாட்டி என்னுட னிருந்து நான் அப்பதியினின்றும் நீங்கும் வரை பிரியா திருந்தார். நாழிக் கிணற்றை நண்ணி ஸ்நானம் முடிக்கப் பணித்தார். உடுத்த ஆடையைக் காயவிடுத்து நீறுபூசிக் கௌபீன தாரியாய் அக்கால் மணற்றிடலில் அமர்ந்து அப்பதிக் கிறையாம் அந்தமிகு செந்திச் செல்வனைக் குழந்தைக் குமரனை, வெற்றிவேற்கிறையை, கந்த நாதனைச் சந்தத் திருப்புகழ்ச் சொந்தக்காரனை, ஆறும் பொருந்திய ஆறுமுகப் பொருளை மதகைத்திருத்தி, மகிமைப் பூசையாம் மவுனம் விளங்கக் **கேசரி முத்திரை ஆசரித்திருந்தேன்.** அக் கால் அன்னவர் அருகே வீற்று அப் பெரு நிலையை ஆராய்ந்திருந்தார். தியானம் முடித்துப் பின்பு, மோனம் நீங்கிய என்னையடுத்து இந்நிலையுண்மை யுரைக்கக் கேட்க, **செய்யும் செயலற்றுய்யும்** வகையில் ஒருமித்திருந்த ஓர்தலை யுண்மையை யுரைக்கக் கேட்டு, அவ்வழி யாதென அவ் வுத்தமர் உசாவ, **மன்னுசக்கரம்** அம்மண்ணிடை வரைந்து, **உருவும், திருவும்** ஒருங்கே பொருந்திய ஒரு தனி முறையை ஒருவாறு செப்பி முடித்தேன்.

பின்னர் ஆலயம் புகுந்து வலம் வந்தோம். ஆங்குள்ள அற்புதச் சிற்பங்களையும், அருணகிரியப்பனின் அருள்மிகு அரிய வடிவையும் இன்னும் பற்பல இணையில்லாக் காட்சியும், இறைஞ்சிப் போற்றிக் கீழைச் சன்னதி வாயிலையடைந்தோம். அர்ச்சகர் முறையில் அப்போதிருந்து பூஜை புரிபவர் விட்டல் சுவாமிகளாதலால் அவரைச் சென்றதும் அழைத்தார் நண்பர். தமக்கு அச் சமயம் ஏற்பட்டிருந்த தலைபாரம் காரணமாகக் கண் விழியாது சயனித்திருந்த நிலைமையில் ஏதும் பதில் பகரா திருந்த அவரைப் பார்த்து, "ஆண்டவன் அருள் கொண்ட பக்தர் இதோ வந்துள்ளார் பாரும். அவர் யாவும் தீர்ப்பார்" என்றார். அவர் விழித்தெழுந்தார். விபூதியால் அவர் தம் சிரத்தைப் பரிசித்தேன். உடனுகச் சுகம் பெற்ற போத்தியார் (விட்டல்) எனது பிரிய நண்பரானார். மாலை ஐந்து மணிக்கு ஆலயம் திறக்கப் பட்டதும், ஆங்காங்கு தீப ஜோதிகள் ஒளிமிகுந்து விளங்கின. போத்தி நண்பர் ஸ்நானம் செய்து முடித்து, அபிஷேகத்தின் நிமித்தம் காவடி கட்டித் தண்ணீர் கொண்டுவந்தார். மூலப் பொருளை முத்தி முதல்வனை, அத்தி முகவனை எட்டுறுப்பும் தோய விரும்பிப் பணிந்தேன். சிறிதும் தாமதமின்றிச் சரணாகதனாய்த் தாழ்ந்த என்னை ஆங்கு திருவாசித் தீபங்கள் ஏற்றியிருந்தவர்கள் ஓடிவந்து, கைப்பிடியாய்க் கொண்டு நிறுத்தி நின்றனர். காரணம் தெரியாது கலங்கிய என்னை நோக்கி "விழுந்து கும்பிட்ட உனக்கு ரூபாய் நூறு அபராதம் வரும். கட்டத் தயாராயிரு" என்றனர். இடையே போத்தியார் காவடி நீருடன் நாழி வாசியினின்றும் தோன்றிக் காட்சியளித்து ஹுங்காரத்வனியுடன் அதட்டியவாறு நடந்தார். எல்லோரும் என்னை விடுத்து விலகினர். காவடி கொண்டு சேர்த்துத் திரும்பிய அவர்,

"யாது காரணம் என என்னைக் கேட்க, மூத்த பிள்ளை யாரை முதலில் வணங்கிய" முழு விபரமும் கூறினேன். அவர் வேலையாட்களைக் கூவியழைத்து "முருகன் பொருள் சிறக்கப் பெற்ற இவருக்கேது அபராதம். இனி இவரிடம் எவரும் அணுகாதீர்கள்" என ஆக்ஞையாய் இயம்பி ஆலயம் புகுந்தார். அவர்கள் என்னைக் கைப்பிடித்த காரணம் யாதெனக் கேட்டுக் கடவுளைப் பணிந்து தாழ்வதும் தவரோ என்றேன். இவ்வாலய விதியில் இதுவும் ஒன்று துவஜ ஸ்தம்பத்திற்கப்பால் தாழ்வதே இவ்வாலய விதிமுறையென்றும் அவ்வாறின்றேல் இங்கு அபராதி யாவார் என்றும், இவ்வகையறியாது அநேகர் நூற்றுக் கணக்கில் அபராதம் அளித்தனர் என்றும் எனக்கு எடுத்துச் சொன்னார். ஒருவாறு யாவும் உணர்ந்த நானும் இரவு பூஜை நிகழும் சமயம் ஆங்குக் கூடியிருந்த ஏராள மான குழுவிடையே ஓர் சார் நின்று ஆண்டவன் பூஜை சிறப்பை ஆர்வமுடன் நோக்கியிருந்தேன். அபிஷேகாதி சிறப்புகள் யாவும் நடைபெறுவதை, அடியார்கள் மன அமைதியுடன் ஆண் பெண் பாலர் பார்த்த கண் பார்த்த படி மனதில் பதித்துப் பாலமுருகனைப் பருகி நின்றனர். புஷ்பாலங்கார சோபிதராய் குழந்தைக் கடவுள் காட்சி யளிக்கிறார். புன்னகை தவழும் புனித குமரன் பக்தர் களைப் பரவசப் படுத்துகின்றார். பக்தர் குழாம் கூடிப் பரவசமாய் ஆடிப்பாடி ஆனந்தக் கடலில் மூழ்குகின்றனர்.

அன்பெனும் ஆறு கரையது புரள நன்புலனொன்றி நாதவென்றரற்றி உரை தடுமாறி உரோமம் சிலிர்ப்பக் கரமலர்மொட்டித் திருதயம் மலரக் கண் களிகூர நுண்டு ளியரும்ப இட்ரைக்களையும் எந்தாய்போற்றி, இறைவா போற்றி, அரசே போற்றி, அமுதே போற்றி, கருமுகிலாகிய கண்ணே போற்றி என்றவாறு

பேரின்பத்தில் திளைத்து அருள் பொங்கித் ததும்பிப் பூரண மாகி எங்கும் நிறைந்த பராபரமாய்த் தோற்றமளிக்கின்றார் மாலின் மருகன்.

ஏகாக்ரத்தில் அனைவரும் மோனம் பூண்ட அந்த அரிய சேவை - ஜீவனொடுக்கம் பூதவொடுக்கம் தேற உதிக்கும் பரஞான தீப விளக்கம் ஓங்கிக் காணத்ததாகார மும் தன்மயமுமாய் சின்மயம் ஓங்கிச் சிறந்து நிறைந்திருந்தது.

இடையே தீபாராதனம் நடைபெற்றது. பக்தர்களது ஹர ஹர கோஷத்துடன் திவ்விய நாம சங்கீர்த்தனமும், ஓர்சார் ஓதுவார்கள் திருமுறையும், இனிய ஓசைகளுடன் வாத்திய கோஷமும் கண்டா நாதங்களின் ஆர்ப்பும் ஆலயமெங்கனும் பரவிப் பிரதிபலித்தது. ஆதியந்த நடுவாய அண்ணலாரின் அருமைத் திருமுகமாய ஓங்காரத் திருமேனி ஒலி வடிவாய் வானளாவ வளம் பெற்றதோ வெனும்படி நாதானு சந்தானம் நிறைந்து காணப்பட்டது.

பக்தர்கள் பல பல வரங்களைக் கோரி வேண்டி நின்றனர். கண்மூடி ஈடுபட்டிருந்த பக்தர் அம்பலவாணர் மனோலயமான சமாதியினின்றும் விழிப்புக்கு வந்தார். எதிரே நின்ற என்னை நோக்கி அம்பலவாணர் கூறுகின்றார், "எனதன்பிற் சிறந்த ஐயா! ஆண்டவனிடம் என்னை வேண்டி ஓர் வரம் நீர் வாங்கித்தாரும், நான் விரும்புவதைக் கேட்டுக் கிருபை செய்யும். பற்பலவாண்டுகளாய் இப் பன்னிரு கை வேலன் திருமுன்பு பரிந்து கோருகின்றேன். எனக்காக நீர் அருள் செய்யும்" என்றார். "பக்தபராதீன னை பரம்பொருள் வேண்டியவர் வேண்டியவாறே அளிக்கும் கற்பகத் தருவல்லவா, அவ்வாறாக இதன்

பொருட்டு யானும் வேண்டுமோ! தாயறியாத சூலுண்டோ! தயாநிதியாகிய தனிப்பெருஞ்சுடர் தண்ணளி புரியாதோ! சகலான்மாக்களுள்ளும் புறம்பும் தனியரசு நடாத்தும் தகைமை மிகு வேலனும் கோரியது தாராதே தயங்காதீர்" என்று விண்ணப்பித்திறைஞ்சினேன். இந்த பக்தர் கோரும் மனுவைப் பரிந்தருளல் வேண்டும் என்று பல்லோர் அறியப் பன்முறை தொழுதேன்.

யாவருங்காண இறைவன் அருகே தூங்கிய பஞ்சாக்ஷர தீபம் மலர்க்கரத்திருந்து அளித்தவாறுபோல் ஓர் மாபெருஞ் சுடரொளி ஆங்கிருந்து ஆறுகஜ தூரத்திற் கப்பாலுள்ள அருமை பக்த்தராம் அம்பலவரருகே ஓடிப்பறந்து ஒளி குறைவின்றி ஒரு தனித்தேவின் உரிமை அளிப்பாய் அவர்பால் வந்து ஆங்கு நிறைந்தது. இதனைக் கண்டோர் யாவரும் ஆஹா! ஆஹா!! ஆஹா!!! வென்றே ஹரா ஹரா முழங்கினர். கோரிய வரத்தைக் குகனேயளித்தார். "குவலயம் மகிழக் குழந்தையைப் பெறுவீர். சோதியாய் வந்த ஈசனே அதுவாம். மகிமை வரத்தை மலர்க்கரமேந்தும், பெரிதும் வாழ்க கடவீர் நீவிர்! இப்பேறெவரே பெற்ருர்!" என்றே வாழ்த்தி ஈசனைப் போற்றி இணையிலதான இலை விபூதிப் பிரசாதமுமேற்று என் பதி நாடி ஈண்டு விரைந்தேன்.

—x—

## 3. நரிநவாப் பிள்ளையார்.

குழந்தை மா நகரில் ஊருக்குச் சற்று மேற்கே ஓர் விநாயகர் ஆலயம் உண்டு. அதற்கு நரிநவாப் பிள்ளையார்

என்பதாகக் கூறுகிறார்கள். பூர்வத்தில் அங்கு ஓர் நாவல் மரம் இருந்ததாகவும் நரிகள் அதனைச் சூழ்ந்து ஏராளமாகக் கூடியிருக்கும் என்றும் சொல்வதுண்டு இந்த ஆலயம் திருவாவினன்குடிச் சன்னதி நோக்கியுள்ளது. மிக மிக வரப்பிரசாதி என்பதாகவும் பெரியோர் கூறுவர். அறை குறையாய் எனது படிப்பு முடிந்து காலித்தனமாய் நான் திரிந்த காலம். அவ்வூர் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் சுப்ரமண்ய சிவம் அவர்கள், ஒருநாள் என்னை நோக்கி "சும்மா சுற்றியலைவதை விட இப்பிள்ளை யாரைப் பூஜை பண்ணு" என்றார். அவ்வாறே சம்மதித்து ஓராறு மாதம் குடம் குடமாய்த் தண்ணீரை மொண்டு மொண்டு சுவாமி தலைமேல் கொட்டுவதும் **(அபிஷேகம்)**, வில்வதளங்களைக் கூடை கூடையாய் உருவிப்பறித்து ஞாப கத்தில் வந்த பதினாறு திருநாமங்களைச் **(ஷோடச நாமங்கள்)** சொல்லி தளங்கள் சுவாமியைமூடவும் **(அர்ச்சிப்பது)** திருப்தி யடைந்து, ஹோட்டல் இட்லிகளை வாங்கிவந்து விநாயக ருக்குக் காட்டுவதும் ஊட்டுவதும் **(நிவேதனம்)** தீபம் போடுவதும் யாதொரு சங்கற்பமுமின்றி நடைபெறும். அக்கால், நியாய ஸ்தலத்தைநாடி அவ்வழிச்செல்வோரிடம் "கேஸ் ஜெயமாகும் காசு போட்டு காணிக்கை செலுத்திப் போங்கள்" என்றும் கூப்பிட்டுச் சொல்லி, அது தப்புமுறை யோ ஒப்புமுறையோ அறியேன், பூஜித்துவந்தேன். எனது பூசனையைக் காண்போர் ஏசி நகைக்கும்படி இருந்ததாயி னும் என் ஆண்டவன் மட்டும் இதனை ஏற்றார் என்பதைப் பிற்காலத்தில் பிரத்யக்ஷமாக அறிந்தேன்.

இந்தப் பூசை நிகழ்ந்த காலம் **1913** ம் ஆண்டு. அப்பால் ஆறு ஆண்டுகள் கழிந்தன. மகாத்மாவான **ஸ்ரீ குழந்தைப் பெரியார்** இப்பதிக்கு விஜயம் செய்து ஓர்

நியாயவாதியின் கிருகத்தில் வீற்றிருந்தார். அச்சமயம் மகாத்மாவை தரிசிக்க ஆங்குச் சென்று நெடுநேரம் நின்றவாறு நான் மௌனமாய் அவரை நோக்கியிருந்தேன். யாது திருவுளம் கொண்டோ மகாத்மா மாடியை விட்டுக் கீழே இறங்கிச் சென்றார். அவ்வில்லத்திருந்த பெண் பாலர் குழுவிடையே நடுநாயகமாய் வீற்றிருந்தார். "அடே வெங்கட்டராமா" என்று மகாத்மா அழைத்த குரல் கேட்டுக் கீழே இறங்கிச் சென்றேன். பகவான் அப் பெண்பாலரை நோக்கி "இவனுக்கு உபதேசம் பண்ண லாம்னு நெனக்கிறேன்" என்றார். அவ்வில்லத்திற்குரிய கிருகிணி உடனுக மகாத்மாவை நோக்கி "ஐயையோ இந்தக் கட்டேலெ போவானுக்கா உபதேசம். நன்னுத் தான் இருக்கு. புள்ளையார் மூச்சடைக்கருப்பிலே கொடங் கொடமா தண்ணெடுத்து பிள்ளையார் தலெமேலே கொட் றதும், ஒயாமே வில்வத்தை எடுத்துப் போட்டு அவரை மூடறதும், இட்லியே வெலக்கி வாங்கி சாமி வாயிலே தீத்தறதும் தான் இவனுக்குத் தெரியும். இவனுக்கு உபதேசம் வேறெயா" என்று கைகொட்டி நகைத்து நடித்தாள்.

இதனையாவும் கண்டு திருச்செவி மடுத்த பகவான் குழந்தைப் பெருமான் மகிழ்வெய்திப் புன் சிரிப்புடன் " அப்படி யானல் சரிதான். இவனுக்குத்தான் உபதேசம் பண்ணனும். வாடா வெங்கட்டராமா" என்றார். இவையாவும் கேட்ட நான் மௌனமாய் மகானைப் பணிந்து நின்றேன. " தந்திர மந்திர யந்திரபாத - சங்கர சங்கர சங்கர நாதா" என்ற அருட்பாவின் அரும் பொருளின் அரிய திருமேனி கொண்ட தாசரதியான எனது ஆத்ம ராமன், ஸ்ரீ குரு

தேவர், அங்குள்ளோர் அனைவரும் கேட்க சத்தி மயம் சூழ்ந்த சிவாகாரமாய சத்தி பஞ்சாட்சரத்தை சாங்கோபாங்கமாய்ச் சன்மார்க்கம் பெறச் சாற்றியருளினர்.

பஞ்சாட்சர மகிமை.

ஆனவஞ் செழுத்துளே அண்டமும் அகண்டமும் -
ஆனவஞ் செழுத்துளே ஆதியான மூவரும்
ஆனவஞ் செழுத்துளே யகாரமும் மகாரமும்
ஆனவஞ் செழுத்துளே அடங்கலாவலுற்றதே.

மும்முறை வலம் வந்து பணிந்த என்னை நோக்கி நூத்தெட்டுப் பண்ணும்படி ஆக்ஞாபித்தருளினர். ஜென்மாந்திரங்களில் செய்த பூர்வ புண்ணிய வசத்தால் மகாத்மாவின் திரு அருளைப் பெற நான் முதலில் பூசனை புரிந்த மூலப் பொருளின் ஆதார பூஜையே இதுவாகும்.

## 4. ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள்.

எனது சக்ரோபாசனை காலத்தில், ஒரு சமயம் எனது சொந்த ஊருக்கு அருகாமையில் நான்கு மைல் தொலைவி லுள்ள, மாத்வ ஜனங்கள் வசிக்கும் கெங்குவார்பட்டி என்னும கிராமத்திற்குச் சென்றிருந்தேன். ஆங்குள்ள எனது நண்பர் ஒருவர், தமது கிருகத்தின் எதிர் வரிசை யிலுள்ள ஓர் பஜனைக் கூடத்திற்கு என்னை அழைத்துச் சென்றார். ஆங்குச் சுவர்களில் தொங்கவிடப்பட்டிருந்த விஷ்ணு மூர்த்தங்களையும் அவற்றின் நடுநாயகமாகி அமைந் துள்ள அவர்களது குருசாமிகளின் பிரசன்னமான மூர்த்தீ காரத்தையும் கண்ணுற்றேன். அந்தப் பிரபை ஒளிரும் ஸ்வரூபம அகன்ற நெற்றித் தலமும், நீண்டு திரண்ட

புஜங்களும், பருத்து அகன்ற தொந்தி வயிறும் கொண்டதாக அமைந்து காணப்பட்டது. அவரது பூதவுடலைப் பொன்போன்ற காவியுடை அலங்கரித்திருந்தது மேலும் அவரது திருமேனி முத்திரா பூர்வகமான துவர்தச புண்டரங்கள் கொண்ட கோபி சன்னத்தராகச் சாக்ஷாத்காரம் பெற்றிருந்தது. அவரது அகன்று நீண்ட நேத்திரங்கள் கருணை ரசத்தைப் பெருக்கித் தோன்றின. என்னையறியாமலே அவரது திரு முன்பு மனமும் தியான நிலைக்கு அவாவியது. அவ்வாறே ஆங்கமர்ந்து மனோபாவத்தில் பாலசுப்ரமண்ய யந்திரத்தை அவரது பிம்பத்தில் ஸ்தாபித்து அவரையே நோக்கியவாறிருந்தேன். எனது சிந்தனையோ சக்தி பூர்வகமான பஞ்சாட்சரத்தில் உச்வாஸ நிச்வாசங்களுடன் ஏகைக பாவத்தில் நிலை பெற்றிருந்தது. இவ்வாறு புலன்களும் உடலுயிரும் ஒன்றுபட்டு அசைவு காணாத நிலைவரவே நாட்டமும் நிலைத்து நீர்சோரக் கண்கள் காட்சியும பெற்றன. அந்த அரிய சேவையில் சட்டங்கள் கண்ணாடி அவரது திருமேனியிலுள்ள துவாதச ஊர்த்துவ நாமங்கள் முதலிய யாவும் காணதாகிக் கனமிருந்த எமது சீமானகிய குழந்தைப் பெரியாரே எனது குறிப்பில் தோன்றிக் காட்சி யளித்தார்.

அந்த எதிர்பாராத தரிசன சேவை எனக்கு ஆங்குக் கிடைத்தது. அன்பும் ஆர்வமும் பொங்கிய குரலில் என் நண்பரை நோக்கி, "என் ஆண்டவனையே இங்கு இவரில் தரிசிக்கின்றேன். என் குரு தெய்வமே இங்கும் காணப்பெற்றேன். எங்கும் நிறைந்த திருமேனியாய் இங்கும் தங்கள் குருஸ்வாமிகளாகிய ஸ்ரீ ராகவேந்திரப் பிரபுவையே இவ்விதம் காணப்பெற்றேன்." என்றேன்.

சத்தாகியும் சித்தாகியும் ஆனந்தமாகியும் நிறைந்து திரு விளையாடல்களைப் புரியும் எனது ஞான தேசிகராம குழந்தைக் கடவுள் இம்மகிதலத்தே மானிடராய் அவதாரம் செய்து சித்துக்கள் பல புரிந்து அடியார்களது அஞ் ஞானம் போக்கி மெய்ஞானம் பாலித்த அற்புத லீலைகள் செப்பத் தரமன்று. இவ்வாறாக அடியார்களை ஆங்காங்கு பலவடிவிற் சென்று மதபேதமின்றி எம்மதமும் சம்மதமாய் திகழ்ந்து அன்பும், சிவமும் இரண்டென்பர் அறிவிலார். அறிந்த பின் அன்பே சிவமதாம். என்று திருவாய் மலர்ந்தருளிய நாயனுர் தம் வாக்குக் கிணங்க, ஆட் கொள்ளும் பரம் பொருள் பூத வடிவுடன் புகழுடம்பும் கொண்ட புனித மூர்த்தியாய் இங்கும் விளங்குகிருர்.

---

## 5. உபாசகனின் சத்திய சோதனைப் பிரமாணம் சக்ரோபாசனையில் நான் கண்ட பலவுண்மை களாவன :-

(1) யாதொரு லிபியும் வரையப்படாத இந்த யந் திரத்தில் கட்புலனும், மனமும் ஏகாக்ரப்பட்டுப் பலவித மாய தரிசனங்கள் பெறல் - அத்தரிசனங்கள் எங்கும் தோற்றமாகிக் காணமற் போதல்.

(2) சக்கரத்தில் கண்ட தரிசனங்கள் உபாசனை முடிந்து நான் வெளியேறியதும் நிதர்சனமாக (உண்மைக் காட்சியாக) நிகழக் காணல்.

(3) புத்தகங்கள் துண்டுக் கடிதங்கள் மூலம் பக்த ரது கோரிக்கைகள் அறிவிக்கப்பட்டு அவ்வுரை உண்மை பெறுதல்.

(4) சந்நிதியில் தீபம், சுடர் தோன்றிப் புஷ்பம் போல் சிறந்து பறந்து காட்டி அருளளித்தல்.

(5) சந்நிதி சார்ந்து கோரி வந்த பக்தருக்கு அருள் மூலம் அநுக்ரஹித்தல்.

(6) சக்கரத்தில் கண்ட காட்சிகள், கனவுகளின் மூலம் உண்மை வெளியாதல்.

(7) சந்நிதியில் கௌளி கோரியவிடத்தில் சொல்லப் பெறுதல்.

(8) அசரீரி வாக்கு மூலம் உண்மையறிதல்.

(9) அருளேறப் பெற்றவரிடம் ஆண்டவன் திரு வருளை நம்பி உண்மையறிதல்.

(10) இவையாவற்றிலும் மேலாய்க் குருவாக்கியத் தைச் சிரசால் வகித்து அதன் வழி தவறின்றி நடத்தல்.

---

# 6. ஏட்டாதாரம்.

புராதன காலமாகப் பழங்கதைகளும் காவியங்களும் வேதபோதனைகளும் நீதி வாக்கியங்களும் பழைய ஓலைச் சுவடிகள் என்று தற்காலம் கூறும் பனையோலைகளில் எழுதப் பெற்று மிகுதியான பலனையளித்து நமது அனுப வத்தில் வியாபகமாக இருந்தது. அத்தகைய ஏடுகள் இன்றும் கூட நடை முறையில் நம்மிடையே நமது அனு பவத்தில் இருந்து வருவதை நாம் காண்கிறோம். ஜோதிட

நூல் வல்லார் இன்றும் வைத்துப் பொன்னேபோல் போற்றும் ஏடுகளும அனந்தம் எங்கும் காணலாகும.

இன்றும் நாம் காண நல்ல பலனளிக்கத்தக்கதாக நாம் தேடியலேவதும் நமது வழக்கத்தில் எங்கும் இருந்து வருகிறது. இம்மாதிரி ஏடுகள் பழங்காலத் திண்ணைப் பள்ளிக்கூடங்களிலும் கூட இப்போதும் நாம் காணலாகும். ஆனல் நாகரீகம் முதிர்ந்த தற்காலத்தில் காகித உற்பத்தியைச் செய்வித்ததும் தவிர, அச்சுக் கூடங் களும், அதனில் மணிக்கணக்கில் பல்லாயிரம் பிரதிகளே உற்பத்தி செய்து உயரிய நிலேயில் நமக்கு இன்று உதவி யளிக்கின்றது. உலகம் போற்றுவதாகவும் இன்றுள்ளது.

வேத காலத்தின் எல்லேயில், நமது முன்ஞேர்களாகிய தவ சிரேஷ்டர்கள், ரிஷீஸ்வரர்கள், தமது அரிய **தவத்தின் மகிமையால்** ஈஸ்வரானுக்கிரஹத்தால் அவர்தமது **ஆக்ஞை யும்** பெற்று, உலகில் ஜீவ கோடிகளின் அவதாரக் கிரமங் களேத் தமது தீர்க்க தரிசனங்களால் கண்டுணர்ந்து, கிர ஹாதிகளின் ஆதிக்யத்தையும், நுட்பமான ஆதாரங் களோடு கணித்து, இம்மை மறுமைக்காகிய இயல்பனேத் தையும் எடுத்து வரைந்தும் உலகில் ஆட்சிபுரியா நிற்பர்.

மேலே கூறப்பெற்ற மகிமை வாய்ந்த ஏட்டாதாரம் தான் நான் இப்போது கூறப்புகுவது.

சுமார் 40 ஆண்டுகட்கு முன்பு. அதாவது சக்ரோ பாஸனே ஆரம்பமாகி, 2 ஆண்டுகளுக்கப்பால் குடும்ப காரியமாக வெளியே சென்று சுமார் 25 படிகள் கொண்ட அரிசிச் சிப்பம் ஒன்றைத் தலேயில் தாங்கி வீடு நோக்கி வந்துகொண்டிருந்தேன். இடையே ஓர் குறுக்கு வழி யாக நடந்து கடைவீதி கடந்து வந்துகொண்டிருந்தேன்

ஆங்கு சாக்கடை ஒன்று போக்கிடமின்றித் தேக்கமாகி யிருந்ததைக் கவனியாது தலைச்சுமையுடன் நடந்துவந் தேன். அச்சமயம் குறுக்கிட்ட சாக்கடையில் கால் பட்டு அழுந்தி, நகத்திடை சிக்கிய ஓர் கரிய ஓலையுடன் காலை வெளியே எடுத்தேன். குனிந்து அதனை வாங்கிக் கரத்தில் பற்றினேன். வீட்டையடுத்துக் கால் கழுவ நீரைக் கோரிப் பெற்றேன். சுமையை வாயிற்றிண்ணையில் தள்ளி ஏட்டையும் காலையும் கழுவிச் சுத்தி செய்துகொண் டேன். சிறிது மஞ்சள் தூளால் ஓலையைத் துலக்கினேன். படித்துப்பார்த்தேன். எனக்கு ஒரே ஆனந்தந்தான். ஸ்ரீ அருணகிரியாருக்கு குருவாக வந்து தோன்றி வல்லாள கோபுரச் சிகரத்தினின்று விரக்தியாய் அடியார் உயிர் மாய்க்க வீழ்ந்த சமயம் வலிய வந்து தோன்றியருளித் தடுத்தாட்கொண்டு தமது திவ்வியப் பிரபாவத்தைப் பாடி யருள், திருப்புகழ் ஓத, முதலடியாயமைந்த, "முத்தைத்தரு" (அதாவது முத்தியைத் தருகின்ற) என்ற இன்னிசைப் பாடலை உபதேசித்தனர் அல்லவா! அவ்வருமை பெருமை வாய்ந்த ஸ்ரீ எம்மிறை முருகேசனது அருள் வாக்கினின் றும் உதயமான அதே பாசுரத்தையே தான் அந்த ஏட்டில் கண்டேன். அளவிடற்கரிய பேரின்பவாரிதியில் ஆழ்ந் தேன். கேவலம் 'சற்றும் தமிழறிவற்ற ஞான' சூன்ய னை அற்பனாகிய என்னையும், ஆட்கொள்ளத் திருவுளத் தடைத்து ஓலை தந்த அந்த உத்தமப் புனித மூர்த்தியும், என்னது ஞான சற்குருநாதனும் ஸ்ரீ குழந்தைப் பெரியாரைப் பெரிதும் வணங்கி அன்றுமுதல் இன்றுவரை அந்தச் சந்தப் பாவை என் சொந்த முறையில் பொருளையறிந்தோ, அறி யாமலோ ஏதோ ஓதிவந்தரியினேன், பதினாறாயிரம் பாக்கள் யாவற்றுள்ளும் பொருளுக்கெல்லாம் மெய்ப்பொருளாய் நின்ற புவனசுந்தரன் அவனுமென்றே போற்றியே வந்தேன்.

அன்பும் ஆர்வமும் பொங்கக் கண்ணீர் ஆறாய்ப் பெருக்கிப் பரவசமாகிப் பலகால் நினைக்க எங்கும் பால னைத் தாங்கியேயிருக்க தருணம் பார்த்துத் தவிப்பைப் போக்கித் தரணி புகழும் தாசரதியின் மருகன் என் தாயும் எனக்கருள் தந்தையுமாய் அன்றுபோலின்றும் என்பால் இணையற்ற பேரன்பு கொண்டுள்ளார்.

இந்த எட்டு மகிமையைக் கேட்டீர்களே! மற்று மொன்றும் கேளுங்கள். எனது ஸ்ரீ ஞான தேசிகராகிய குழந்தை தெய்வத்தின் பேரருள் திருவாக்கின் மகிமைப் பேற்றால் உதித்த எனதொரு மைந்தனின் திருமணம் பேச வந்த ஒரு பிரபல தனிகர் தன்மகள் ஸ்ரீமதி சரஸ்வதிக்குப் பொருத்தமான வரன், எனது குமாரன்தான் என என் னுடன் வாதித்துப் பொருத்தம் முதலிய யோக பாவங் களையும் இருதிறத்தவரின் விஷயங்களையும் சாங்கோபாங்க மாக விவரித்துக் கூறும் ஏடு ஒன்றை எடுத்துக் காட்டினார்.

அஃது தில்லையம்பலம் என்றும் பொன்னம்பலம் என் றும் சித்சபை என்றும் புலியெங்களும் போற்றிக் கொண் டாடும், கந்தனூர் சொந்தமாய்த் தேடி, நாடி ஐக்கியமான தும், தேவரும் மூவரும் காணா வண்ணம், கால்மாறியாடிக் குழையேற்றிக் காதொடு காதாய்க் காலாலணிந்த பிஞ் ஞகன் திருக் கூற்றைக் காணப் பேராவல் கொண்டு விண்ணைப்பித்த புலிப்பாதங் கொண்ட வியாக்ரபாதரும், பாம்பின் பாதம் தாங்கிய பதஞ்சலி மகாமுனிவர் என்ற மாபெருந் தவத்தரும், மகிரிஷி சிரேஷ்டருமான அவர் தமது திருவருள் வாக்கியமாயமைந்த ஏடாக விருந்தது. இந்தப் பெரியாரின் திருவருளாலமைந்த வாக்கியமும் பொய்யாமொழியல்லவா!

இந்தத் திருவேட்டின் வண்ணமே திருமணமும் இனிதே பூர்த்தியாக ஈசன் அருள் பாலித்தார்.

மேலே சொல்லிய யாவற்றுள்ளும் கையும் மெய்யுமாகக் கண்டது மற்றுமொன்றும் ஈண்டு ஒளி மறைவின்றி உரைக்கக் கேண்மின் :-

எனது சொந்த அனுபவங்களை உள்ளவாறு நான் எழுதியுள்ள "குரு சரிதம்" என்னும் நூலில் பக்கம் 224 ல் ஸ்ரீ சுவாமிகள் ஜாதகம் இதற்குச் சிறந்த சான்றாகத் தற்சமயம் அமைந்திருப்பதை அனைவரும் காணலாகும். இந்தப் பெரியாரது வரலாற்றை வடநாட்டிலும் தென்னாட்டிலும் பக்தர்கள் பலவிதம் சொல்லக் கேட்டதை அவ்வாறே வரைந்திருக்கிறேன். ஆனால் அவற்றையெல்லாம் உண்மையாயேற்க உலகம் மறுக்கவும் தவறாது என்பதையும் உணர்ந்தேன். ஆகவே உண்மை அறிய முற்படும் எனது முயற்சி தெய்வத்திருவருளால் வெற்றியே பெற்றது பாருங்கள்.

சுமார் பதினாறாண்டுகளாய் நான் பலர்பால் கேள்வியுற்ற ஸ்ரீ மாணிக்க ராஜ சாஸ்திரியார் சரஸ்வதி ரேகை சாஸ்திர சாலையில் சுமார் 30 ஆண்டுகளாக மறைந்து பொதிந்து கிடந்த ஸ்ரீ சுவாமிகளின் திருக்கரங்களின் ரேகை மூலமாய் வெளியாகி, ஆனால் மிக்க அந்தரங்கமாகவே இதுகால பரியந்தம் வைக்கப் பெற்றிருந்த **திகிரிச்சூல கபால பௌஷ்ய சக்ராயுத ரேகையின்** வாயிலாக அற்புதப் பொற்புடன் வெளியான, உலகம் போற்றிப் புகழ்ந்து பூசிக்கும் ஸ்ரீ மீனாம்பிகை தனையராம் ஸ்ரீ குழந்தைக் கடவுளின், பன்னீர் காண்ட மடங்கிய பழங்காலத்து

எடு, ரூபாய் இருநூறு எதிர்பார்த்த சாஸ்திரியார், உள்ளங் குளிரத் தந்த, மேல் வீடு தரும் புனித குமரன் புகழ்பாடும் வண்ணம் பக்தர்க்கருளிய பாதுகை, பரமசிலாக்கியமாக, யோக்கியவான்களுக்கு அளிக்க அருமையும் பெருமையு மாய் என்னப்பன் அருட்டேசிகன், என் ஆத்ம நாதன் பேரன்புடன் பிரசாதித்துள்ளார். பூசித்துப் போற்றக் கடவீர், தருணமிதே. யாசித்து அவர்தமது அருளையும் அன்பையும் அள்ளிப்பருகக் கடவீர். மெய்க் கலியுகப் பெருங்கடவுள் என்றே நாளும் போற்றக் கடவீர். உபா சனை உயர்வுக்கு ஏற்றம் காண்பீர். இதுவே எட்டாதாரம்.

---

# 7. சர்மாவின் அதிர்ஷ்டம்.

மதுரை மாநகரில் ஒரு பக்தரது கிருகத்தில் நமது மகாத்மா வசித்திருந்த சமயம், அவரது அன்பிற் சிறந்த பேரன் ஸ்ரீமான் சுப்ரமண்ய சர்மா, தமது மைத்துனர் பின் தொடர மகாத்மா இருப்பிடம் தேடி விசாரித்துத் தரிசிக்கச் சென்றார். மகாத்மாவைக் கண்ட சுப்ரமண்ய சர்மா தாங்கள் கொணர்ந்த கனி வர்க்கங்களையும் மற்ற வைகளையும் அவர்தம் அடியிணையில் வைத்துப் பணிந்தெழுந் தார். மகாத்மாவுக்கு மிக மிகப் ப்ரீதியளிக்கும் மிக விலை யுயர்ந்த குடகாரஞ்சுப் பழங்களாகவும், நாசிகா சூர்ண மாகவும் அவை காட்சியளித்தன. மகாத்மா அவற்றை ஆர்வமுடன் நோக்கித் தமக்கு விசேஷ அன்புடன் வாங்கி வந்த ஆங்கில ஆசார நடையுடன் விநயமாய்ப் பக்கலில் நின்ற ஸ்ரீ நீலகண்ட சர்மா அவர்களைக் கடைக்கணித்தார். தமது முன்னர் வைக்கப் பெற்றிருந்த நாசிகா சூர்ணத்தைக்

கையிலெடுத்தார். தமது மூன்று விரல்களில் அழுந்தப் பிடித்தார். நாசியில் வைத்து இழுத்தார். நாதம் த்வனிக்க நாசிவழிச் சென்றவாசி முட்டிச் சென்று முனைகடந்து மோனமும் ஓங்கப் பெற்றார். வெளியும் ஒளியும் விரவிய வேதாந்த நிலையை, நாதாந்த வரையை, யாவுங் கடந்த பெருவளியைக் கிட்டித், ததாகாரமானார்-தக்ஷணம் தமது தயான தயாபரியின் திருவுளமுமறிந்தார். பக்கலில் நின்ற சுப்ரமண்ய சர்மா அவர்களை நோக்கிப் பரிந்து குடும்ப யோக க்ஷேமங்களை விசாரித்தார். அவர் தம் பக்கலில் நின்ற நீலகண்ட சர்மாவைச் சுட்டி, "உன் மைத்துனன்தானே அதோ நிற்பது? என்னைப் பார்க்க வந்தது ரொம்ப சந்தோசம்" என்றார். "ஏனிப்படி லஜ்ஜைப்படவேண்டும். இந்த உடையிலே நம்மை நமஸ்காரம் செய்ய முடியவில்லையே என்ற கவலையா ? உன் கள்ளங் கபடற்ற வெள்ளையுள்ளம் நானறியேனா, உன் பணிவும் தாழ்மையும் பக்தியும் நானறியேனா, நீ நல்ல விவேகி கடமையில் கருத்துள்ளவன் அந்தரங்க பக்தனும் கூட. காலில் பணிய இயலவில்லையேயென்று கவலைப்படாதே வஞ்சனையற்ற நெஞ்சினையுடைய நீ பிற்காலத்தில் உயர்ந்த பதவி, நிறைந்த சம்பளம், பரந்த சுற்றம், பகவத் கடாக்ஷம முதலிய சகல செல்வயோகமிக்க பெருவாழ்வு பெறப்போகிறாய். மகத்தான யோகம், நல்ல திசை, நான் சொன்னேன் என்றுபார், இன்றுமுதல் பன்னீராண்டில் உண்மை காண்பாய். எங்கம்மா கிருபை உனக்கு அமோகமாக உண்டு" என்றவாறு திருவாய் மலர்ந்தருளிக் கனியளித்த பக்தரைக் கனிவுடன் கடைக் கணித்தருளினார். பஞ்சாட்சரப் பிரசாதமும் அவர் தமக்கு மும்முறை பரிந்தருளினார். விடைபெற்ற அவ்விருவரும்

வெவ்வேருய்ப் பிரிந்துத் தத்தம் வேலை நிமித்தம் சென்று விட்டனர். மகாத்மாவைத் தரிசித்துச் சென்ற சர்மாவின் மைத்துனர் நிறைந்த குரு கடாச்சத்தால் சுக்கிலபட்சத்துச் சந்திரன் போன்று உத்தியோக உயர்வு பெற்றுச் சிறந்து விளங்கினர். பாரத நாட்டில் உத்தியோக முறையில் பலவிடங்களிலும் சென்று பரிந்து தம் கடமை புரிந்தார். அவ்வாருகிய ஒரு சமயம் உயர்ந்த பதவியில் நிறைந்த ஊதியம் பெற்றுக் கடல் கடந்து வந்த இவரை, இவரது தமக்கையாரது கிருகத்தில் நான் சந்திக்க நேர்ந்தது. உத்தியோக முறையில் மிக மிகப் பெரிய (உன்னத) நிலையிலுள்ள இவரை அங்கு கண்டதே வந்தனம் செய்தேன். இவர் தமது தமக்கையாரைக் கூவியழைத்து, "வந்தவர் யாரோ தெரியவில்லை அவரை விசாரி" என்றார். இதைக் கேட்டிருந்த நான், "அம்மா நான்தான் வெங்கட்ரமணன். தமது சகோதரர் இங்கு வந்து தங்கியிருப்பதை அறிந்தேன். அவரது யோகக்ஷேமம் விசாரித்துப் போகலாம என்றுதான் வந்தேன்." பின்னர் கனம் சர்மா அவர்கள் இவர் யாரென்று தமக்கையாரை விசாரிக்கவே அந்த அம்மாள் உறவின் முறையை விஸ்தரிக்கக் கேட்டார். உடனே எழுந்து, ஓகோ அப்படியா! நமது 'பாந்தவ்யம் இவ்வாறு? ரொமப சந்தோஷம் என்று சொல்லி என்னை நோக்கி, "உட்காருங்கள், என்னைத் தேடிவந்த காரணம் யாது? நான் தங்களுக்கு யாது செய்யவேண்டும்?" என்ருர். இதுகேட்ட நான், "தாங்கள் என்னிடம் தெரிவித்தவாறு எவ்வித உதவியும் கோரித் தங்களிடம் வரவில்லை. இனம், பந்து, என்ற முறையில் தங்களைக் காணவந்ததேயொழிய வேறில்லை. தவிர வெகு வருடங்களாகத் தம்மைக் காணுததால் இன்ருயினும் சந்திக்க நேர்ந்தமை

கருதிப் பார்த்துப் போகவே வந்தேன். தங்கள் மூலம் எதிர்பார்க்கும் காரியம் எனக்கு எதுமில்லை. குருதேவர் ஸ்ரீ குழந்தைப் பெரியாரின் விசேஷ அநுக்ரஹத்தால் சிறந்த அடியாருக்கு ஓர் குறையுமுண்டோ?" என்றேன். இவ்வாறு நான் கூறியளவில் அவரது தமக்கையார் தமது கனிஷ்டரை நோக்கி, "இவர் நமது சம்பந்த வழியில் மிகவும் நெருங்கியவர். தவிர இவர் தமது வீட்டின் பின்புறம், ஸ்ரீ குழந்தை ஸ்வாமிகளுக்காக ஓராலயமும் கட்டி அவரது உருவப்படமும் வைத்து நெடுங்காலமாக விசேஷமாகப் பூசித்து வருகிறார். அந்தப் பெரியார் நான் வாழ்க்கைப் பட்ட இந்த குடும்பத்திற்குப் பாட்டனார் முறையும் கூட. நீயும் உன் அத்தம்பியார் கூடப்போய் அவரைக் கண்டாயாமே" என்றார். இவ்விபரங்கள் யாவும் செவிக்கொண்ட சென்னை மாகாண அதிகாரச் சிறப்புப் பெற்ற சர்மா அவர்கள் எழுந்து, "ஆம் ஆம் அக்கா இப்பொழுதுதான் ஞாபகம் வருகிறது இன்று சுமார் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு நான் தபால் இலாகாவில் வேலையில் அமர்ந்த சமயம் மதுரைக்குச் செல்லநேர்ந்தது. அப்பொழுதான் நம் அத்தம்பியாரும அங்கு வந்திருந்தார். இம்மகாத்மாவைத் தரிசிக்கப் போவதாக என்னிடமும் சொல்லி அழைத்தார். கனிவர்க்கங்களும் பொடிப் பட்டையுங்கூட வாங்கிச் சென்றோம். அப்பெரியாரைக் கண்டு சமர்ப்பித்தோம். அந்தச் சமயம மகாத்மாவான அப்பெரியார் அருளிய தீர்க்க தரிசன அருள் வாக்கு இப்பொழுதுதான் ஞாபகத்திற்கு வருகிறது! என்ன சொன்னார் தெரியுமா அக்கா! அதை இப்பொழுது நினைக்கும் பொழுதே ஆனந்தமுண்டாகிறது. நமஸ்காரம் பண்ணுகிறதற்கு இல்லையே என்று கவலைப்படாதே உனது

மனது எனக்குத் தெரியும். நீ மேன் மேலும் உயர்ந்த பதவி பெறப்போறே. என் வாக்குப் பொய்க்காது. நீயே ஒரு காலத்தில் நினைப்பாய்." என்றார். "அக்கா அவர் சொல்லிய பன்னிரண்டாம் வருடம் தான் இது அவரது அநுக்ரஹ வாக்குப் பலித்தது. இப்போதுள்ள மகோன்னத நிலைக்கு அந்த குருபகவான் அருள்வாக்குத் தான் மூல காரணம். அவ்வளவு பெருமை தங்கிய பெரியார் அவர். அவரையடுத்தோர்க்குக் குறையுமுண்டோ?" என்று தமது தமக்கையாரிடம் அன்பு ததும்பக் கூறிய பின், என்னை நோக்கி "ஆலயம் கட்டி அப்பெரியாரைப் பூஜிக்கும் பேறுபெற்ற உம்மைக் காண மிகவும் சந்தோஷம். குருபகவான் கிருபை உங்களுக்குப் பரிபூரணமாக இருக்கிறது. உங்களை இங்குச் சந்திக்க நேர்ந்ததும் அவரது திருவருளே. உங்கள் தமையனார் முதலிய உங்கள் குடும்பத்தில் யாவரும் ஸௌகமா! ஏதோ தெய்வாதீனமான சந்திப்பு" என்றார்.

சர்மா அவர்களைப்போல் அநுக்ரஹம் பெற்ற பக்தர்கள் கோடானுகோடி. எங்குமுளது. நான் சந்தித்து நேரில் கண்டு பேசிய மகாத்மாவின் உண்மை மகிமை. இதனைப் பிரத்யக்ஷமாக அறிந்த எதிர்பாராத ஓர் சம்பவம இது. இன்னும நான் அறியாத, மகாத்மாவின் எத்தனையோ மகிமைகள் அனந்தம உண்டு மகாத்மாவில் கடைக்கணிக்கப் பெற்றவர்கள், தர்மார்த்த காம்ய மோட்சமாதி சதுர்வித பல புருஷார்த்தங்களும் பெறுவர் என்பது எக்காலும உண்மை.

——x——

## 8. மகாமகம்.

பகவான் ஸ்ரீ குழந்தையானந்தம தமக்கென்று ஓர் இருப்பிடத்தை குறிப்பிட்டு ஹாலாஸ்ய பதியில் தேவி

யருளால் பல ஆண்டுகள் வந்தார் அங்கும் தேவியான பரமாதாவை வழிபட்டு அடியார் பல்லாயிரவர்க்கு அனுக்கிரஹித்துவந்தார். பஹிர்யாகம், அந்தர்முக பூஜை இவற்றில் அனவரதமும் ஈடுபடுவார். பக்கத்தே தமக்குரிய பணிகளைச் செய்யச்சொல்வர், ஸ்ரீமான் ராமலிங்கத்தைக் குடும்பத்துடன் பாதுகாத்தார். செல்வர் ராமலிங்கமும் மகாத்மாவை அடுத்து நிழல்போல் அவர்தமை நீங்காதிருந்தார். வறியரேயாயினும் மக்கள் பேருகிய நிறை செல்வம் பெற்றவர். கற்பக விருக்ஷம் போன்ற கலியுக அவதார புருஷனுகிய நம் குழந்தை முருகேசனை அண்டி ஆஸ்ரயித்திருந்தார். செல்வர் ராமலிங்கம். சன்மார்க்கத்தில் நின்ற செல்வர் ராமலிங்கம் மகாத்மாவின் இன்னருளைப் பெற்ருேரில் தலை சிறந்தவராவார். மஹாத்மாவின் மகா சமாதிக்குப் பின்னர் தமது தாயும் தாரமாய் நின்றவர் தவறிடவே தத்தளித்தார். சின்னஞ்சிறு குழந்தைகளைக் கண்காணித்தும், மகாத்மாவின் சமாதியை அடுத்துப் பூசித்தும், ஆண்டு தோறும் பக்தகோடிகள் உதவியால் பொறுப்பேற்றுப் பூசித்து வருகிருர். ஒரு சமயம் பன்னீராண்டுகட்கோர் முறை கூடும் கும்பகோணம் மகாமகத்திற்கு, பக்தர்க்களித்துப் பயன்பெற **மகாத்மாவின் உருவப்படம் மூவாயிரம்** கொண்டு சென்ருர். ஓர் தக்க ஜாகாவில் தங்கினுர். மஹாத்மாவின் உருவப்படங்களைப் பகிரங்கமாய் விக்ரயம் செய்தார் ஏதோ சொற்பம்தான் விலையாயிற்று. பல்லாயிரம் கோடி பக்த்ர்கள் நாளுவிடங்களினின்றும் ஆங்குவந்து சேர்ந்து தமது அரிய பாபச் சுமையைப் போக்கிப் புண்ணியச் செல்வராம் நமது குருமூர்த்தியை ஸ்வீகரித்துச் சென்றனர். இவர் தமது ஊர் நோக்கித்திரும்புகையில் கணக்கைக் முடிவு கட்டினுர்.

தமது போக்கு வரவுக்கும், உண்டி, இருக்கை இவற்றைச் சரிகட்டுமபடியாக மட்டும் படங்கள் விலையாகியிருந்தன. கொண்டு சென்ற மூவாயிரத்தில் கால் நூறு போக யாவற்றையும் மூட்டை கட்டினுர். காலையில் பிரயாணத்தைக் கருத்தில் கொண்டார். கண்மூடி நித்திரித்தார். அவரது கனவில் காட்சியிலே மகாத்மா தோன்றி "அப்பனே, செல்வர ராமலிங்கம் என்னை விற்றுப் பணமா சம்பாதிக்கப் பார்க்கிறுய். இவ்வளவுகாலமாய் என்னிடமிருந்தும் என்னையறியாமலே போனுயே. என் விலை என்ன தெரியுமா ? சரி, போ-போ! இனி இவ்விதம் செய்யாதே. எனக்கு நீ இதுவரை தொண்டு செய்த காரணமாக நாம் இதனைப் பொறுத்தோம். இந்த மட்டில் திருப்தியுடன் ஊர் போய்ச் சேர்." என்பதாகத் திருவாய் மலர்ந்தருளி மறைந்தார்.

காலையில் எழுந்த செல்வர் ராமலிங்கம் கனவின் காட்சியிலே தாமறிந்த உண்மைகளை எண்ணி மனமாழ்கி வருந்திஞர். காலைக் கடனை முடித்துக்கொண்டு கண்மூடி நின்று கனமிகும் சீமானுகிய குழந்தைக் கோமானைத் தன்னை மன்னித்து நல் வழிப்படுத்திய தன்மையை நினைத்து கண்ணீர் பெருக்கி வந்தித்து வணங்கிஞர். பாரத காவியத்தில் நான் கண்ட பெரியாரின் மகிமையைப்பற்றி இச் சமயம் வாசகர்களுக்கு ஞாபகம் செய்ய நினைக்கிறேன். அஷ்ட வசுக்களில் ஒருவராயும் தீர்க்கமான பிருமபசரியத்தைத் தன் தந்தை சந்தனு மகாராஜனை முன்னிட்டு அனுஷ்டித்தவராயும், பாண்டவர்க்கும், கௌரவருக்கும் பாட்டனுகவும் உள்ள பீஷ்மாச்சாரியார் குரு க்ஷேத்திர யுத்தத்தில் பாணத்தில் அடிப்பட்டுச் சாகாது சரசயனத்தில் இருந்து உத்தராயண புண்யகாலத்தை எதிர் நோக்கியிருந்த சமயம்.

பாண்டவர் ஐவருக்கும் தருமா தருமங்களையும், நீதி நூல் முறையையும் வேதசாரமான உண்மைகளையும் சாந்தி பர்வம என்ற அதிகாரத்தில் விளக்கி பகவான், ஸ்ரீ வாசு தேவன் முன்னிலையில் உபதேசம் செய்தார். அக்கால் யுதிஷ்டிரர் தமது பாட்டனரிடம் பெரியாரின் மகிமைகளைப் பற்றிக் கூறும்படி அடிபணிந்து பக்திவினயமாய்க் கேட்கையில் பாட்டனரளித்த உபதேசம் பின்வருமாறு :-

வலைஞன் ஒருவன் ஓர் தடாகம் சென்று வலைவீசி மீன்கள் பிடித்து விக்ரயம் செய்து தனது குடும்பத்தை நடத்தி ஜீவித்துவந்தான். அவ்வாறு ஒரு சமயம் சென்று தடாகத்தில் வலை வீசுகையில் வலைகனத்து, வெளியே இழுத்துப் பார்க்க மிக மிகப்பெரிய ஜலசரம் ஒன்று காணப் பட்டது. அதனை எடுத்துச் சென்று அரசனது அரண் மனையில் கொடுத்தான். அதனைப் பக்குவம் செய்யத் துவங்கி அரிகையில் அதனுள் சமாதியில் இருந்த ஒரு பெரியாரைக் கண்டனர். அரசனுக்கு உடனகத் தெரி வித்தனர். அந்த மீனுக்கு விலை விசாரித்துக்கொண்டிருந்த அரசன் சுயமபாகி அனுப்பிய செய்தி கேட்டு சமாதியி னின்றும விழிப்புக்கு வந்த அமமகானைக் கண்டு வியந்தனர். அப்பெரியார் தாம அப்பொய்கையில் உள்ளே தவம புரிந்திருந்ததாயும தன்னை அச் ஜலசரம விழுங்கியது தாம அறியாது நிகழ்ந்ததென்றும தெரிவித்தார். தவிர தாமும அமமீனுடன் சேர்ந்திருந்தமையால் தமமையும உடனகச் சேர்த்து அவ்வலைஞனுக்கு விலையளிப்பதே நியாயமென் றும் அம்மீனுடன் தாமும அரசர்க்கே உரியவர் என்றும் தெரிவித்தார். இதுகேட்ட மன்னன் அவ்வாறுயின் தமது விலை நூறுவராகனு அல்லது ஆயிரமா, பதினயிரமா,

லக்ஷமா, கோடியா என்றே வினவ அம்மகான் தன்மதிப்பு இவ்வளவுதானு, இவ்வளவுதானு என்றே சொல்லியவாறு இருந்தார். வேந்தன் திகைத்து அப்பெரியாரின் வாசகங் களின் உண்மை யுரியாது சபையின் கண் வீற்றிருந்த ஏனைய பெரியோரை அதன் பொருளை விளக்கும்படி கேட்க நீதிநூல் ஆய்ந்த பெரியார் ஒருவர் அரசனது சம்சயத்தை விளக்கி ஒப்பற்ற ஓர் காமதேனுவே ஓர் பெரியாருக்குச் சமம். அவரது மதிப்புவிலை அஃது ஒன்றே என்றும் ஈசனது சொரூபமே அவர்கள் என்றும், உலகிற்கே உயிர்நாடி போன்றவர்கள் என்றும் அவர்தம் மகிமை செப்பத்தரமற்றதென்றும் விசேஷமாக அவ்வரசர்க்குப் பெரியாரின் மகிமைகளை எடுத்துக் கூறித் தெளிவுபடுத்தினுர். அவ்வாருயின் அங்ஙனமே செய்வோமென காராம்பசுவொன்றைத் தருவித்து அச் செம்படவனிடமளிக்க அவன் அரசனைப் பணிந்து "இதனைக்கொண்டு யான் செய்வது யாது! இதனைக் காக்க என்னலாகுமா? எனக்கிது தகுமா? எனக்கு அம்மீன் விலையொன்றே போதும்" என்று விண்ணப்பித்தான். இதனைச் செவிக் கொண்ட மன்னன் நீதியுணர்த்திய அந்தணர்க்கே அதனைக் காக நீர்வார்த்து அளித்து, அச்செம்படவனுக்கு மீனுக்குரிய கிரையத்தைத் தந்தனுப்பினுன். என்பதாய்ச் சரக் கூட்டில் சயனித்திருந்த பெரியார் பீஷ்மாச்சாரியார், பெரியாரின் மகிமைகளை இன்னும் பற்பலவிதமாய்ப் பாண்டவர்க்கு விஸ்தரித்தருளினுர். இதனையாவும் பக்தி வினயமாய்க் கேட்டிருந்த தரும நந்தனுதியர் அவர் தமை நமஸ்கரித்துத் தமது நகரை நாடி நடந்தனர். இதனை யாவும உடனிருந்து திருச்செவி மடுத்த கண்ணபிரான் மந்த ஹாசம் புரிந்தருளினுர். சயனித்திருந்த பெரியார்

பகவானை கண்ணைக் கை கூப்பிக் கண்ணேக்கால் மனதிடை தியானித்தவாறு ஸ்வரூப சாக்ஷாத்காரத்தில் ஈடுபட்டு லயித்தார். ஆகவே நீதி நூல் வல்லார் ஆய்ந் துணர்ந்த அரிய உண்மை இவ்வாருக இருக்க, மகாத்மா வின் படத்திற்கு விலை ஒரு ரூபாய் என்று அளித்த செல்வர் ராமலிங்கம கனவில் தோன்றி மகாத்மா உணர்த்தியதற் கப்பால் அவ்வாறு செய்வதை அறவே ஒழித்துவிட்டார்.

---

## 9. குள்ளச்சாது.

### மகமதியர் வீட்டில் மஹாத்மா படம்.

மதுரைக்குத் தெற்கிலுள்ள தென்பரங்குன்றம் ஸ்ரீ முருகேசனது படை வீடுகளில் ஒன்ருய் முக்கியம் வாய்ந்தது. ஸ்ரீ குமாரக் கடவுள் தேவ சேனுபதியாய்ச் சென்று சூரபன் பனுதியரைச் சம்ஹார்ரம் செய்த பின்னர் ஸ்ரீ தெய்வயானை அம்மையாரைத் திருமணம் புரிந்து பக்தர்க்கு அநுக்ரஹார்த்தமாய் நின்ற தலமாய் விளங்கு கிறது. இந்த திவ்விய க்ஷேத்திரத்தில்தான் சித்தபுருஷரான சிக்கந்தர் சமாதி தென் பாரிசத்தில் உள்ளது. மகமதியர் கள் ஆங்குப் பலகாலும் சென்று தமது வேதமான குரானை ஐந்து காலமும் தவருது ஓதிப்பணிந்து பலவரங் களும் பெற்று வருவர். ஸ்தலங்கள் தோறும் இவ்வா ருகிய மகிமையிற் சிறந்த மகான்களின் சமாதிகளும் எப் பொழுதும் இருந்து வருகிறது. என்ற உண்மையை அநேகமாக யாவரும் அறிந்திருக்கலாம்.

இதுபோன்று பமநிப்பதியை ஆராய்ந்தால் ஆங்கு சித்த புருஷரான மகான் போகாது சமாதி உளது. அவரது மகிமைத் திருவிளையாடல்கள், பலவேறு நிலைகளில் லீலைகள் பக்தர்கள் சதா கொண்டாட நிகழும் அஃது செப்பந்தரமன்று.

அதிசய மநேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழக – திருவேரகத்தின் முருகோனே.

என்று வியந்து கூறியுள்ளார் அருள் சிறந்த அருணகிரிப் பெருந்தகையார்.

இந்த போக சித்தாது மாத்திரைக் கட்டுகளுள் ஒன்றுதான் இன்று பழநிச் சந்நிதியில் அவரது அபாரமான மகிமைகளை மூர்த்திகரமாய் நின்று அநுக்ரஹம பாலிக்கின்றது. இந்த மகான் சமாதியுள்ளிருந்து புரியும் திருவிளையாடல்களைப் போகர் ஏழாயிரமும், பன்னீராயிரமும் இன்றும் பழங்காலத் தமிழ் மறைகளாய் சித்த முறையில் வைத்தியம், மாந்ரீகம் முதலியவற்றை உலகம் உண்மையறிய யோக சித்திகளை விளக்குகிறது.

இவ்வாறு எந்தப்பாடல் பெற்ற ஸ்தலங்களிலும், மூர்த்திப்பதிகளிலும், சித்த புருஷர்களின் சமாதிகள் அமைந்து அதன் மூலம் அந்த மூர்த்திகரம் பிரசன்னமாக விளங்குகிறது. படை வீடுகள் பலவற்றிலும் சிறந்த பெரியாரது சமாதி அடக்கம் ஆராயில் புலனாகும்.

சிறந்த செந்திப்பதியில் குமரகுரு தாஸஸ்வாமிகள் கலியாண மண்டபத்தில் சமாதியில் அடக்கம். சிறந்த பொன்னம்பலத்தில் மகான் குரு நமசிவாயர் சமாதியடக்கம். இவற்றை எடுத்து எழுதப் புகில் பெருகும்.

சுருங்கக் கூறுமிடத்து மகிமையிற் சிறந்த பெரியாராலேயே இன்றளவும் உலகம் ஆஸ்திகத்தில் நிலைத்து நிற்கின்றதெனலாம். இனி நமது கதையைத் தொடர்வோம்.

பரங்குன்றை நாடிவந்த ஓர் மகம்மதிய பக்தர் ஒரு சமயம் தமது அலுவல்களை முடித்துப் பெரியார் சமாதியை நோக்கி விரைந்தார். இவர் மிகுந்த மதப்பற்றையுடையவர். அநுஷ்டானக் கண்டிப்புடையவர். இவர் மதுரையிலுள்ள மகம்மதியர் வீதியில் (காஜிமார் தெருவில்) வசிப்பவர். தொழுகைக் குறிய வேளை நெருங்குவதையுணர்ந்தார். நாணல் பூத்ததும், அழகிய செந்தாமரை மலர்களால் சிறந்து விளங்குவதுமான வனப்புவாய்ந்த சரவணப் பொய்கையை அடைந்தார். ஆதவனைக் கண்டு இதழ் விரித்துப் புன்னகை பூத்த அரவிந்த சமூகங்களைக் கண்டார். மென்மையான காற்றில் நறுமணங்கமழ்ந்து எங்கும் பரவி வியாபித்துத் தலையசைப்பது, அன்பிற் சிறந்த அடியார்களை வரவேற்பது போன்றும் புனிதமுடைய இப்பூந்தடத்தில் புகுந்து நீராடப் புகழ்வது போன்றும் இருந்தது. பற்பல வண்டினங்கள் மதுகரத்தை நாடிவந்து மொய்த்து ரீங்காரத்வனியுடன் இருந்த காட்சி ஞானமாம் அமுதுண்ணக் கூவியழைப்பது போன்றுமிருந்தது. அம்மதுவுண்ட வண்டினங்கள் பின்னர் மோனம் பொருந்தி நின்றநிலை, ஆன்ம கோடிகளுக்கு இறுதி மோன சமிக்ஞை முறையை அநுபவத்தில் காட்டுவதாகவிருந்தது.

வாவிப்படித்துறையைச் சுற்றிலும் நோக்கினர். அக்கால் ஆதவன் இளங் கதிர்பரப்பிப் பூந்தடத்திலுள்ள

கமல முகங்களில் கலந்து மகிழ வந்த தன்மையாய்க் கதிரவனது சாயை நீரில் தவழ்ந்து எங்கும் மிகுந்த சோபையை அளித்தது. இயற்கை இனிய காட்சியில் திளைத்த மகமதிய பக்தர் பொங்கிய பூரிப்புடன் பொய்கையில் புகுந்து விளையாடினர். மீனினங்கள் போன்று அங்குமிங்கும் பன்முறை மூழ்கி வெளிவந்தார். பொய்கையில் வெகுதூரம் சென்றார். களைதீரக் கண்மூடிக் கணநேரம் தமமை மறந்து நீரில் தவழ்ந்தார். அந்நீர் நிலையில் அடிவரை பன்முறை சென்றுவந்தார். தமது மெய்யெங்கணும் தாறுமாருய்த் தமமை நெருக்கிப் பிணித்த தாமரை நாளங்களால் தாக்குண்டு தவிக்கலானர். ஆவி காக்க முயன்றார். எட்டாக் கரையை கிட்டவும் எண்ணினர். இனிக் கரை சேரப் போவதில்லை என்ற முடிவுக்கும் வந்துவிட்டார். உயிர்க்கே இறுதியான அந்த நேரத்தில் சமாதியில் இருந்த சாதுப் பெரியாரைச் சிந்தித்தார். திரிகரணங்களாலும் வந்தித்து வழிபட்டார். ஆவிகாக்க அவாவி ஆண்டவனைக்கூவி "அல்லா! அல்லா!" என்றோலமிட்டார். அதுசமயம் அமமகம்மதியர் பக்கலில் திடீரென்று தோன்றி அப் பாசக் கொடி விலக்கி அவர் தமைக் கரத்திலேந்தியவாறு படிக் கரையில் விடுத்து **மாயமாய் மறைந்தார் ஒருவர்.** ஒருங்கே மனமும் கண்களும் கலங்கிய மகம்மதிய பக்தர் உயிர்காத்துத் தம்மைக் கரை சேர்த்த உத்தமரைக் கண்டு மனமார்ந்த நன்றி செலுத்த நாற்புறமும் விரைந்து நோக்கினர். நீண்டு தொங்கிய கரங்களும் தொந்தி வயிறும் குறுகிய வடிவும் கொண்ட கோதிலாக் குமரனை வாவி கடந்து வாயுவேகமாய்ச் செல்லும் ஓர் **கௌபீன தாரியான குள்ளச்சாது** ஒருவரையே கண்டார். அவரது மறைவுக்கும் தமது மடமைக்கும் வருந்தினர். பின்னர் பெரியாரின் சமாதி சென்று தமது

உயிர்காத்த கருணையை நினைந்து கண்ணீர் பெருக்கி வாழ்த்தி வழிபட்டுத் திரும்பினர்.

மற்றுமோர் சமயம் தமது சொந்தக் காரியமாகப் புறப்பட்ட அந்த மகமதிய பக்தர் வண்டியூர் மாரியம்மன் தெப்பங் கடந்து செல்ல நேர்ந்தது. தமது தொழுகைக் குறிய நேரம் தொடங்குவதைச் சிந்தித்தார். தொழுகை முடித்துப் போக எண்ணினர். விசாலமான அந்த தெப் பத்தையணுகினர். படிகடந்து பச்சென்றிருந்த நீரை பரிசித்தார்.

அச்சமயம் குளக்கரையில் அவாருகே **வீற்றிருந்த குள்ளச்சாது, வாமனரூபர்** தமது கரங்களை நீட்டிச் சைகை யாக "**நீரில் இறங்காதே வழுக்கிவிடும். கரையிலிருந்தே காரியம் முடி**" என்பதாக அபிநயங் காட்டி அருள்புரியக் கண்டார். அவ்வாறே செய்து திரும்பிய முகம்மதிய பக்தர் **திரும்பி நோக்கக் குள்ளச்சாது கூப்பிடுதூரம் கடுகி நடந்து காணுதானர்.** "ஆகா, ஆகா இம் முறையும் நம்மை எச் சரித்து ஏகினரே. பரங்கிரி வாவியில் பார்த்த சாது போலுளாரே. இம்முறையும் நாம் மேலும் போனேமே நன்றி கூற இயலாமற் போயிற்றே என் செய்யலாம்?" என்று எண்ணி ஏங்கினர். ஆயினும் "ஒருவாறு இருமுறை யும் அவர்தம் உருவையுணர்ந்தேன், ஓஹோ ஹோ! ஆண்டவரின் திருவே இது" என்று **தம் மனத்தில் குள்ளப் பெரியாரைக் குறித்துக்** கொண்டார். பள்ளி வாசலை நோக்கிப்பரிந்து நடந்தார். ஒருமனங் கொண்டு ஓதி முடித்தார். மீண்ட பக்தர் வீட்டிற்கு விரைந்தார். வழி நெடுகிலும் விழியை வைத்தார். குள்ளச் சாதுவைக்

குறித்தே நடந்தார். ஆங்கொரு கடையில் குள்ளச்சாதுவின் உருப்போல் படமுங்கண்டார் கடையை அணுகிக் கண்டு தெளிந்தார். குழந்தைப் பெரியார் இவர் தாமென அறிந்தார். குறிகித் தாழ்ந்து வணக்கமும் புரிந்தார். விலையும் கொடுத்து அவர்தம் படமும் பெற்ருர். வீட்டையடுத்து விநயமாய்ப் பூசை வேணது புரிந்தார். சர்க்கரை வத்தியும் சத்திபோல் வைத்துப் பாத்தியா ஓதிப்பலர்க்கும் அளித்தார். மாடியறையில் மாபெரும் பொருளாய் மகிமை விளங்க வைத்துப் போற்றி வருகிருர் இன்றும். பக்தர்க்கிரங்கும் குள்ளப்பெரியார் வரம் பல உதவி இவருக்கு வளமிகவளித்து குன்றின் தோன்றலாய் குவலயம் புகழக் குறைவற நின்றுளார். மதம் மதம் என்று மாய்ந் திடும் மானிடர் மாசு தீரவே மாபெருங் காத்தின் மானிட வடிவுடன் மாநிலமதனில் கோலமாய வேலவன் பெயரால் குறையை நீக்கிய குழந்தையாயிருப்பர். நம் உயிர்த்துணைத் தோன்றல் ஸ்ரீ குழந்தைப் பெரியார். இம்மகிமையுண்மை யை மனதினில் கொண்ட என்னருஞ் சோதரர் ஓர்நாள் இதனை என்னிடம் உரைக்கக் கேட்டு இன்பவாரிதியில் இணைந்தேன் யானும்.

---

## 10. மௌன சந்திப்பு.

மனோகரமான மாலைநேரம் பகலவன் தனது விருத்த வடிவச் சுந்தரத் திருமேனியில் உலகோர் காணக் காட்சி யளிக்கின்ருன். கலப்பற்ற ஆரஞ்சு வர்ணச் சோதி. வான வீதியினின்றும் இறங்கி மலைகளிடையே மறை கிருன். மேல் வானத்தில் பல விடங்களில் வெண்ணிறப் போர்வையுடுத்த வியப்புறும் தோற்றம். புவியில் தோன்

றும் அதன் சாயை ஓர்சார் பொற்றகட்டையும் மற்ருேர் சார் வெள்ளித் தகட்டையும் விரித்துக்காட்டி மனத்தைப் பரவசப் படுத்துகிறது. தேமாவில் தென்றல்கலந்துவரும் தோற்றம், தேகத்தையும் சார்ந்த மனத்தையும் தீதகற்றித் தெளிவுபடுத்துகின்றது. தேன்போன்ற சுவையுடைய தெள்ளிய நீரைச் சுமந்த தெங்கு திசைபரவி அசைந்து காண்கிறது. பாலர், பாலிகைகள் நீரோடையின் கரை யில் களித்தாடியும், கனிகள் பறித்தும் குதூகலமாய்த் தமதில்லம் நோக்கித் திரும்புகின்றனர். குளத்தின் மறுகால் குதித்துக் கோலாகலமாய் ஓடி ஒலித்து வயல் களில் புகுந்து வடிவு காட்டித் தோன்றுகின்றது.

கழனிகளில் வேலை செய்த களைப்புத் தீரக் குளித்து, உழவர் பலர் ஒய்யாரமாய்த் தெம்மாங்குபாடி வீடுநாடிச் செல்கின்றனர். ஆடுமாடுகள் மேச்சல் தலம் நீங்கிக் கன்றை நினைந்து கால் வாரி நடைபோட்டுக் காண் கின்றன. பக்கத்தில் குருகுலம் பள்ளிச் சிறுர் கலை பயில் கழகம், வாய்க்காலின் மறுகரையில் அணைக்கட்டுகளின் மீது கற்களின் உஷ்ணம் தாக்க வந்தமர்ந்தேன்.

வானவீதியில் கண்ணுடி போல் மின்னிட்டு மறையும் ஆதவன் உருவை ஊடுறுவிக் காண்கின்றேன். கண்ணீர்ப் பெருக்கில் அழகு வாய்ந்த அந்திவெய்யோன் அரு கிடையே அரிய பல தரிசனங்களைப் புறக்கண்களால் தெரிசிக்கின்றேன். அந்தமிகு மன்னையாம் ஆதி மகமாயி செந்நிறத்திருமேனியாய் அரிய காட்சியளிக்கின்ருள். அடுத்தாற்போல் மேகத்திடையே வேற்கை வீரனும் நங்குமரேசன் காட்சியளிக்கின்ருர். அதன் பின்னர் நால்வகை சிறந்த லாவண்யக் காட்சி, அதனில் ஈடுபட்டு

நான் இருக்கையில் அவ்வுரு வெளித்தோற்றம் யாவும் மறைந்து மேகவண்ணன் குழலிசைத்துக் காட்டும் கால் பிண்ணி நின்ற காட்சியும் காண்கின்றேன்.

அத்தனையும் அடுத்தகணம் மாயமாய் மறைந்து காணுதாகி மகிமைசால் சிற்றடி பெயர்த்து வரும் ஜகம் புகழும் குருநாதன் என் ஆருயிர்த் தலைவன், அந்தணர் குலக்கொழுந்தாம் குழந்தைக் குரு தெய்வம் மலர் முகமும் மகிழ் பூத்த காட்சியும் கண்டு தரிசித்தேன். காணுததைக் கண்டது போல் கண்ணீர் பெருக நோக்குகின்றேன். கல்லான நெஞ்சமும் நெகிழ்ந்துருகச் சித்திரப் பாவை போலாகித் தன் செயலடங்க மந்திரக் காலோச்சி மது உண்ட வண்டென மயங்கி மோனம் பொருந்திச் சிலையை நிகர்த்திருந்தேன். இவ்வரிய காட்சியுடன் வீடடைந்து இறைவனை எண்ணிப் பலவிதமாய் இறைஞ்சி நின்றேன்.

நள்ளிரவு மணி1-45நி. கனவின்காட்சியிலே காண்கிறேன் கர்த்தனை ஒப்பற்ற குரு வடிவில். மாலையில் பெற்ற அம் மாபெருங் காட்சிக்குச் சாட்சி பகர்ந்ததுபோல் அந்தமிகு தோற்றமாய்ச் செஞ்சுடர்த் திருமேனி தாங்கித் தவழ் கின்றுர் தயாநிதி குழந்தைப் பெரியார். வர்ணனை கடந்த வாலிபத் தோற்றம். உருண்டு திரண்டு, நீண்ட வலிய புஜங்களின் வாளிப்பான அமைப்பு. குறுகிய வடிவுடன் கனத்தகன்ற தொந்தி வயிறும் பாரைத் தொட்டு நின்ற பாங்கான தோற்றம். அகன்ற நெற்றித் தலமும் கருணை பொழியும் விரிந்தகன்ற அரவிந்த நயனங்கள். கௌபீன தாரியாய்த் தவழ்ந்த திருக்கோலம். முறுவல் பூத்த முகார விந்தம், காண்டற்கரிய சேவையில் திளைத்த நான் பரவசனுனேன். காற்றுக்கொடுக்கக் கட்டளையிடுகின்றுர்

கருணாநிதி. அக்கணம் விரிந்தகன்ற விசிப்பலகையில் ஒய்யாரமாய்ச் சாய்ந்து மதிமுகம் விளங்கக் காட்சி மறு முறையளிக்கின்றார். தேவனது திருவுள்ளமும் மெய்யுங் குளிர நான் விசிறிக்காற்று அளிக்கின்றேன். அக்கால் குழந்தைக் குமரன் திருக்கரங்களை அலங்கரித்திருந்த ஓர் புத்தம் புதிய புத்தகம் ஒன்று கண்டேன். அஃது யாதென அறியவும் அவாவினேன். கனமிகும் சீமான் காரிய நிகழ்ச்சியாய் அப்புதிய நூலை விரித்து நோக்கினர். அந் நூலின் கடைசி ஏட்டைக் கண்டு கண்ணேட்டமிட்டனர். அதனில் அருமை ஓவியமாய்த் தோன்றிய குறுஞ்சிப் பொருப்பின் கோலமாய் காட்சியும் கண்டேன். பின்னர் மன்னனும் நமதுமாபெரும் தெய்வம் "இதனைப்படி" என்றார். இதனைச் செவிக்கொண்ட நான் கண்ணாடி எடுக்கக் கடுகிச் சென்றேன். அக்கணம் எம்மிறை தமது பேரனும் சுப்ரமண்யரைக் கூவியழைத்தார். "இங்கேவா, இதனைப் பார், இது யார்?" என்றே குழைய அழைத்துக் குதூகல மாய்த் தமது அபய கரந் தழைக்கக் காட்டி முறுவல் பூத்தார். இணையிலா இத்தரிசன சேவை எதிர்பாரா இச்சந்திப்பு என் ஜன்ம சாபல்யம் என்றே இயம்புதல் சாலும். அவர்தம் சரிதையை அந்நாள் பன்முறை அன்பர் இயம்பத் தண்ணளி செய்தவாறு போல் இன்றும் அவர்தம் மலர்க்கரத் தேற்றுத் தம் திருவுளம் மகிழப் பக்கலில் நின்ற அருமைப் பேராம் சர்மாவையும் அழைத்து ஆர்வங்காட்டி எமக்காதரவளித்து அங்கீகார மும் பெற்றேன்.

நான் கண்ட அந்நூலின் கடைசிச் சித்திரம், மிகுந்த விசித்திரத் தோற்றம். சுருளிமலைச் சிறப்பேதான்,

அதனில் ஆண்டவன் அரசச் செல்வனாய் அமைந்து விளங்க அன்பர்க்கின்பம் அருவிபோற் சொரிந்து சித்தர் மகிழச் சிறப்பாயுள்ளார். உண்மையன்பரேயடைவர் அவர்தம் அருட்பெருஞ்சோதியாகிய வடிவம்.

சிறந்த மகான்களின் பேரருளைப் பெறச் சன்மார்க்கத் திற்குரிய சற்கருமங்களைச் சிரத்தையுடன் புரிந்து அவர் தமது பணிவழி நின்றொழுகி அவர்களது பேரன்பை நித்தியமாய்ப் பெறுவோமாக. பகவானை அடைய முயலும் ஒவ்வோருயிர்க்கும் இன்றியமையாத பூசை முறைகளில் இம்மௌன சந்திப்பே இணையீடற்ற ஆத்ம பூஜையாம். ஆதலின் பக்தர்கள் தெய்வீகமான தூய்மைக் காதலை அவர்தம் அருளால் பெற்றுப் பேரின்பப் பேற்றைப் பெருவாராக.

## 11. உபநயனம்.

மகாத்மாவின் அநுமதியைக் கோரிப் பெற்று அவரது திருமுன்பு கனம் ராமஸ்வாமி சர்மா (மகாத்மாவின் பேரர்) தமது குழந்தைகளுக்கு உபநயனம் என்னும் சடங்கை வைதீக ஆசாரத்திற்கிணங்கப் புரிகிறார். ஓர்சார் விப்ரோத்தமர்களின் வேதகோஷமும் மற்றுமோர்சார் பந்துமித்திரர்களின் கூட்டமும் வாத்ய கோஷங்களின் இன்னிசையொலியும் நாரீமணிகளின் நவயௌவனலங்காரங்களுடன், கந்த புஷ்பாதிகளின் நறுமணமும் அக்கினி காரியங்களும் விமரிசையாக நடைபெறுகின்றது. எல்லோர்க்குமிடையே அநாயகமாய் நமது ஞானப் பாட்டனார் ஸ்ரீ குழந்தைப் பெரியார் இடையிடையே எல்லோரையும் கடாக்ஷித்த

வாறு நாசிகா சூரணத்துடன் முப்புரிநூலின் நுண் பொருளாக காட்சியளிக்கின்றார். மந்திரங்களுக்கெல்லாம் தாயகமான ஸ்ரீ காயத்திரி மஹாமந்திரத்தைத் தந்தையான சர்மா அவர்கள் தமது தனயருக்கு பிரமோபதேசம் செய்கிறார். மகாத்மாவின் வருகையால் மகிழ்பூத்த கனம் சர்மா அவர்கள், தமது புத்திரர்களுடன் மகாத்மாவின் அடிபணிந்து ஆசி பெறுகின்றனர். வந்த விருந்தினருக்குக் காலையாகாரமாக காப்பி, இட்டிலி பரிமாறுகிறார்கள். மகாத்மா அது சமயம் தனது திருவுள்த்து முகிழ்த்த பெருங் கருணையால் தமது இருக்கை விட்டெழுந்தார். சித்தாடச் சற்று நினைந்தார். விளையாட்டாக ஆங்குள்ள வாலிபர்களிற் சிலர் சுவாமிகளையும் தம்முடன் சிற்றுண்டி அருந்தும்படி கேட்டுக் கொண்டனர். மகாத்மாவும் அதற்கிணங்கினார். உடனுகை ஆறு மரக்கால்கள் கொண்ட பெரியதொரு கூடையில் சுமார் அறுநூறு இட்டிலிகள் அடங்கியதை மகாத்மாவின்முன்னர் வரவழைத்து, மகாத்மாவே பிரமித்துவிடுமாறு பிரமாதமாக உபசரித்தனர். இத்தகைய மகத்தான சமயம் எனது ஜேஷ்டரும் ஆங்கு விஜயம் செய்திருந்தார். எல்லோரும் அதிசயிக்கும்படி அருமையான செட்னி வகைகளுடன் சர்க்கரையும நெய்யும் கலந்து மஹாத்மாவாகிய குழந்தைக்கு ஊட்டியுபசரித்தனர். எடுத்தூட்டும் கரமும் கூட கடுப்புக்கண்டது. கூடை காலியான பின்பு மஹாத்மாவாகிய குழந்தை அவர்களை நோக்கி, "இவ்வளவுதானா? இன்னுமிருந்தால் கொண்டுவா. என்னடா, சும்மா உட்கார்ந்திருக்கே! எழுந்திரு. பசி அதிகமா இருக்கு இன்னும் எத்தனை கூடை இட்டிலி இருக்குமோ அத்தனையும் கொண்டுவாடா சீக்கிரம்!" என்று மஹாத்மா அவர்களை

தூண்டியவாறிருந்தார். உள்ளேயிருந்து இனிமேல் இட்டிலி கிடையாது, அவ்வளவுதான் தீர்ந்து விட்டது. என்றே பதிலும் வந்துவிட்டது. உடனுக மகாத்மா ஆங்குள்ளோரைப் பார்த்து, "கொடுத்த இட்டிலியை எல்லாம் சரியாக கணக்கு எண்ணினியா? எண்டா முழிக்கிருய், இப்போ எண்ணிக்கோ" என்று குத்திட்டமர்ந்தார். கும்பகமும் செய்தார். ஆசனவாய்ப்புறமிருந்து அவர்கள் ஊட்டிய இட்டிலியும் செட்னியுமாக முழு உருவத்துடன் அத்தனையும் அறுநூறும் வெளியேறி வீழ்ந்தது. மகாத்மாவின் அரிய இந்தச் செய்கையை உள்ளே அவற்றை ஏற்ற விந்தையையும் முழுசு முழுசாக வெளியேற்றிய காட்சியையும் கண்டு யாவரும் கொண்ட வியப்பு அளவு கடந்ததாயிருந்தது. இதனை நேரில் கண்ட ஸ்ரீமான் சுப்ரமண்ய சர்மாவும் இவ்வதிசய சம்பவத்தை, அமானுஷ்யச் செய்கையை விடாது கண்ணுற்றிருந்தார். அண்ட பிண்ட சராசரங்கள் யாவையும் தமது குக்ஷியிடமாக வைத்துப் பரிபாலிக்கும், இத்தெய்வப் பெரியார்க்கு இஃது ஓர் அருமையான காரியமோ? ஐந்தொழில் புரியவல்ல ஆற்றல் படைத்த ஆறுமுக வல்லலாரின் திருவவதாரமல்லவோ இம்மகான் என்று மெய்யன்பு பூண்டு அடிபணிந்து அனைவரும் வழிபட்டனர். தமதற்ப மதியால் தாமபுரிந்த சோதனைக்காக மனம் மிக வருந்தி மன்னிப்பும கோரினர். மகாத்மாவும் புன்னகை தவழப் பூமியில் புரண்டு புவன சுந்தரியாம் தமது மாதாவின் ஞானமிர்தமுண்ட திருமேனிகாட்டிப் பக்தர் இல்லங்களில் புகுந்து இவ்வாறு எண்ணுதற்கரிய சித்துக்கள் பல புரிந்து எங்கும் இருப்பர். இவ்வாறு இம்மஹாத்மா புரிந்த அரிய சித்துவிளையாட்டை யாமனை வருமறிய எனது

தமையனார் எடுத்துக் கூறிய உண்மையான இம்மகிமைச் செயலை ஈண்டு யானும் கேட்டதே போல் எழுதியவாறு காண்க.

---

## 12. சிவசக்தி.

தொண்டமான் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் திவான் பேஷ்காராக கனம் சங்கர காமேஸ்வர சர்மா அவர்கள் உத்யோகம் பார்த்தார். மகாத்மா ஒரு சமயம் அவர்களது கிருகத்திற்கு விஜயம் செய்திருந்தார். அந்த சமஸ்தானத்தில் அரசருக்கடுத்தபடியாக கௌரவமான ஸ்தானம் வகித்தவர் கனம் சர்மா அவர்கள். சிறந்த மேதை. வடமொழியில் மிக்கப் பயிற்சி பெற்ற விற்பன்னர். தேவி பூஜா துரந்தரர் மகாத்மாவிடம் மிக்க அன்பு பூண்டவர். கனம் சர்மா அவர்கள் அரசருக்கு அந்தரங்க காரிய நிர்வாகியுமாவர். அவரது கிருகத்தில் மகாத்மா தங்கிய ஒருசமயம் அவரது இல்லாள் மிகுந்த சிரோபாரத்தால் வாதனையுற்றுப் பல மாதங்கள் படுக்கையில் இருந்தாள். சமஸ்தான பண்டிதர்களது விசேஷ பரிகாரங்கள் எதும் சிறிதும் பயனளிக்காமற் போயிற்று. அந்தச் சமயந்தான் மகாத்மாவும் ஆங்குத் தோன்றி அவர்களுக்குக் காட்சி அளித்தது. கிருகஸ்தர் மகாத்மாவிடம் தமது பாரியாளின் விடாது தொடுத்த தலைநோவைபற்றிப் பிரஸ்தாபித்தார். பரிகாரமும் வேண்டினார். மகாத்மாவும் அவ்வம்மையாரை அழைத்து விசாரித்தார். மிக்க அசிரத்தையுடன் தோன்றிய அவரது இல்லாளோ ஏதோ ஒருவாறு தமக்குற்றதைத் தெரிவித்து அவ்விடம் விட்டு அகல ஆரம்பித்தாள்.

மகாத்மா அக்கணம் அப்பெண்மணியின் பேதமையை உணர்ந்தார். கிண்ணத்தில் தண்ணீர் கொண்டுவரப் பணித்தார். பக்கலில் இருந்த பஞ்சாக்ஷர விபூதிப் பிரசாதத்தை பிடித்து நீரிலிட்டார். அடுத்தபடியாகக் குங்குமத்தை (சத்திப் பிரசாதத்தை) எடுத்துக் கிண்ணத்தினுள் ஓர்சார் போட்டார். அதனை உற்று நோக்கும் வண்ணம் ஆங்குள்ளோரைப் பணித்தார். சர்மா அவர்களும் அவரது தர்மபத்தினியாரும் கண்ணுற்றனர். அச்சமயம் மகாத்மாவின் பக்கலில் நின்ற தமது சாக்ஷாத் பேரனான நாராயணனையும் அவ்வாறே செய்யக் கட்டளையிட்டார். யாவரும் காண அம்மையப்பனாகி நின்ற ஸ்ரீ மாதாவான மீனம்பிகையாரையும் பரமபிதாவான ஸ்ரீ சுந்தரேஸ்வரப் பெருமானையும் சாக்ஷாத்காரமாகப் பாலன் நாராயணன் பக்தி விநயமாய் தரிசித்து அதனை ஆண்டுளோர் அனைவரும் கேட்கப் பகர்ந்து மகாத்மாவின் சீர் பாதங்களில் பணிந்தான். மகாத்மாவின் கரத்திலிருந்து வெளியாகிய விபூதி, குங்குமத்தின் பிரபாவம் சர்வசக்தியாய் விளங்கும் சாக்ஷாத்காரத்தை நீரிலும் தோற்றுவித்து நேரிலும் காணும்படியிருந்தது. மகாத்மா அதன் பின்னர் அவ்வம்மையாரைக் கூவியழைத்து, "நீயும்பார்," என்றார். அவ்வாறுசெய்த நாரீமணி தனது ஊனக் கண்கள் படைத்த பயனாக மகாத்மாவின் கிருபையால் தாமும் அவ்வரிய சேவையைப் பெற்றாள். அங்ஙனமாக மகாத்மா அக்கிண்ணத்தைக் கரத்திலேற்றுக் கலந்தளித்து அவ்வங்கனாமணியைப் பருகச் செய்து நீண்டகாலமாகத் தீராதிருந்த தலைச்சுமையை தவிர்த்தருளினார். குருதேவர் ஆக்ஞையின் வண்ணம் தரிசனம் பெற்ற பின்னரும் தலைவலிமாத்திரமோ அகலும்? ஊழிற்பெருவலியாவுங் கூட ஓட்டமெடுக்காதோ? பகவானது திருமேனியாய் இப்புவியில்

தோன்றிய புனிதர்கள் தமது திருக்கரத்தால் தொட்டளித்த மண்ணும் பொன்னாக மாருதோ? இந்தமகான் இந்தச் சமஸ்தானத்தில் வசித்திருந்த காலத்தில் அவரது விசேஷ மகிமைச் சித்துக்களை ரசித்தவர் இந்நகர் வாசிகளேயாவர். இத்தகைய சிறப்பு வாய்ந்த ஞானாசிரியர்களைக் கள்ளங் கபடமற்ற உள்ளத்தால் பலகாலம் பணிந்து பணிவிடை செய்து பெறற்கரிய பேற்றைப் பக்தர்கள் பெறுவதே ஜனனமரண பிணியை பாவசாகரத்தைக் கடத்தற்குரிய மார்க்கமாகும்.

---

# 13. அகஸ்திய பிர்மம்.

இந்த திவ்விய க்ஷேத்ரம் மகாத்மாக்களின் உதயத்திற்கு ஆதார பீடம் என்றே சொல்ல வேண்டும். சதா மகான்கள் பலபாகங்களிலிருந்தும் இங்குவந்து பலநாட்கள் தங்கி பக்தி மார்க்கத்தைப் பெருக்கி பாமரர்களுக்குப் பல்வகையாலும் இகபரத்திற்கு யோக்கியமான பல சாதகங்களைப் புரிந்து செல்கின்றனர். இவ்வாறு இங்குப் பலகாலம் தங்கித்தமது யோக சித்திகளின் மகிமையால் விளையாடி ஜாதிமதம் என்ற வேறுபாடேயின்றி ஆண்டருளியுள்ளார். அத்தகைய மகிமையிற் சிறந்த பெரியாரில் ஸ்ரீமான் சுப்பையா சுவாமிகளும் வடநாட்டிலிருந்து விஜயம் செய்து மஞ்சளாற்றின் கரையில் மழை, வெயில், பனிபோன்ற வேறுபாடுகளை சிறிதும் லக்ஷியம் செய்யாது தூணி தேவாக்கினி, வளர்த்தி அதனை யணையவிடாது எவ்வகைக் கொடிய விலங்குகளாலும், ஸர்ப்பாதி ஊர்வன வற்றாலும் சிறிதும் அச்சமின்றி இராப்பகலாய் மந்தரங்

களைப் போற்றிப் பகர்ந்து பாஷாஞானம் உணராத நமக்கும் ஒருவித அச்சமும், ஆர்வமும், பக்தியும் தோன்ற வலியவந்து தரிசனம் தந்துள்ளார். மகிமையிற் சிறந்த நம் குழந்தைப் பெரியாரும் அவ்வாறே ஈண்டு விஜயம் செய்து தாயன்னத் தமதின்னருளைத் தாராளமாய்த் தவிப்பவர்க்குத் தந்துதவியுள்ளார். பித்தர் போன்றும் பேயான் பத்தர் போன்றும் ஞானிகள் இந்த க்ஷேத்திரத்தில் சதா தெருத்தெருவாய் அலைந்து சுற்றி சுடுகாடென்றும், இடுகாடென்றும் பாராது எங்கும் வியாபித்துச் சஞ்சரித்துப் பற்பல அமானுஷ்யமான காரியங்களைப் புரிந்துள்ளார். இவர்கள் பரிபாக மறிந்து பக்தர்க்கருளும் மாட்சி வியக்கத் தக்கதாக இருக்கும். வீதியில் குப்பைகளைத் தள்ளிச் சுத்தம் செய்யும் குரவர் குல மக்கள் செல்லுகின்றார்கள். மஹான் ஓத ஸ்வாமிகள் குப்பை மேட்டையலங்கரித்த வண்ணம் சயனித்தவாறு காட்சியளிக்கின்றார். வாயினுள் நிறைந்த தாம்பூலம் பல பக்கங்களிலும் வடியக்காட்சியளிக்கின்றார். பக்தர் செல்வச் சீமான் கனம் ஸ்ரீ வைத்தியநாத சர்மா அவர்கள் மேற் சட்டையுடனும் சிரசில் கனத்த முண்டாசுடனும் கைத்தடி ஏந்திப் பாதரக்ஷையும் பூண்ட திருமேனியாய்த் தமது வயல்வெளி காணப் புறப்பட்டுச் செல்கின்றார். இடையே மஹானைக் காண்கின்றார். பெரியாரிடம் மிக்க அன்பு பூண்டதன்மையால் பணிந்து மரியாதை செலுத்துகின்றார். “எங்கே புறப்பட்டாய் அப்பா? விவசாய காரியமாகவா?” என்கிறார் சுவாமி சுப்பையா. “சுவாமி இவ்விடம் ஏகாந்தமாக சயனித்திருக்கிறுப்போல் இருக்கு. அடியேனுக்கு வெகு காலமாக ஓர் எண்ணம் மனதில் இருக்கிறது. ஓர் விண்ணப்பம். உத்தரவானல் சொல்லுகிறேன்.” என்றார் நமது சர்மா

அவர்கள். "சுவாமி அடியேனுக்கு உபதேசம் செய்தருள வேண்டும். கிருபை எப்படியோ," என்றார் பக்தர். "ஆஹா அதற்கென்ன அப்படியே செய்வோம். அதோ பார் இருவர் தெருவில் குப்பை கூட்டிச் செல்கிறார்கள். வேகமாய்ப் போய் அவர்களை பிரதக்ஷணம் செய்து மும்முறை காலில் விழுந்து நமஸ்கரித்துவிட்டுவா," என்றார் பெரியார். இவ்வாறு சொல்லக் கேட்ட பக்தர் சர்மா அவர்கள் தலையைச் சொரிந்து கொண்டார். கையைப் பிசைந்து கொண்டார் நாணத்தால் தலை குனிந்து மௌனம் பூண்டார். தமது செல்வ நிலையையும், பெரிய சந்ததி வாழ்க்கையையும் தமது சிந்தனைக்கு வரவே லஜ்ஜை மேலிட்டு அக்கணமே அவ்விடம் விட்டகன்றார். சுவாமிகள் "சரி உனக்கு பிராப்தம் அவ்வளவுதான் போபோ," என்று பகர்ந்து, பரிபக்குவம் பார்த்தனுப்பினார். இவ்வாறே பக்தர்களைப் பரிசோதனை செய்து பயன் பெறவும் அநுக்கிரகியா நிற்பர். அப்பால் இம்மஹாத்மாவையடுத்து ஓர் பெண்மணியும் தனக்கு உபதேசம் செய்தருளும் வண்ணம் பலகாலம் இப்பெரியாரைக் கேட்டுவந்தாள். தம்மை நமஸ்கரித்து நின்ற அந்நங்கையைச் சோதிக்கத் திருவுளம் கொண்டு ஆடைகள் அனைத்தும் நீக்கி அக்ரஹாரத்தைச் சுற்றி வலம் வரும் வண்ணம் ஆக்ஞாபித்தார். அவ்வம்மையார் வெட்கத்தால் உடனே ஓடி மறைந்தாள். மகான்கள் பேதம் பாராது மலத்தை எடுத்துப் பூசியும் வேலிக்காலிலுள்ள கள்ளிச் சிம்புகளை ஒடித்து அப் பாலைத் தப்பாமல் கண்ணிலிட்டுத் தேய்த்தும் சப்பாத்திப் புதரிடையே சுகமாய்ச் சென்று சயனித்தும் லீலை காட்டி மனித சக்திக்கு மீறிய யாவும் புரிந்து பேதம் கடந்த பொருளாய் போதவடிவாய் நாதான் மியம் சிறக்கத் தனிப்பொருளாய்

சிவாகார ரூபமாய் நிறைந்திருப்பர். பூதவுடலைக் கட்டிப் பிணித்துப் பூட்டி வைப்பினும் அடுத்த கணம் ஆங்குக் காணப்படாது கூப்பிடுதூரத்திலிருந்து கன வேகமாய் வருவர். கரம் முதலிய தமதங்கங்கள் வெட்டுப்படினும் கணத்தினுள் அவை திரும்பத் தோன்றக் காட்சியளிப்பர். கந்துகத்மதக்கரியை வசமாய் நடத்தலாம் காடி வெம்புலி வாயையும் கட்டலாம். ஒரு சிங்கமுதுகின்மேற்கொள்ள லாம். கட்செவியெடுத்தாட்டலாம் வேறொருவர் காணுமல் உலகத்துலாவலாம். விண்ணவரை யேவல் கொள்ளலாம. சந்தமும் இளமையோடிருக்கலாம். வெறொரு சரீரத்திலும் புகுதலாம். ஜலமேல் நடக்கலாம். கனல்மேலிருக்கலாம். தன்னிகரில் சித்திபெறலாம். சிந்தையை அடக்கியே சும்மாயிருக்கின்ற திறமரிது. சத்தாகி என் சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே தேஜோ மயானந்தமே என்பதாக அட்டமா சித்திகளிலும் தேர்ந்து இவை எதனிலும் பற்றுவைக்காது சிவயோகத்தில் சதா நிலைத்துச் சான்ருேரிருப்பர். இத்தகைய பேராற்றல் வாய்ந்த நம் பெரியார் குழந்தை தெய்வம் இப்பதிக்கு விஜயம் செய் திருந்த சமயம் பக்தர்கள் ஏராளமாக வந்து கண்டு பணிந்து தமது குறைகள் நீங்கப் பெற்றுச் சென்ற வாறிருந்தனர். ஒரு சமயம் இப்பதி நாடிவந்து பலமாதங்கள் தங்கிவசித்துச் சென்ற வடநாட்டுச் சாதுப் பெரியாரை (பிரம்மச்சாரி) ஆச்ரயித்த ஸ்ரீமான் சுந்தரேஸ்வர சர்மா நம் மகானை வந்து கண்டு அவரது கோவண உடையையும் நடையையும் தவழ்ந்த திருக்கோலத்தையும் மழலை மாருத மொழியையும் பரிகசித்துப் பழித்தவராய் மனதினுள் நினைத்து எட்டநின்று கண்ணேட்டமிட்டவராய் இருந்து வந்தார். இம்மகாத்மாவை அடிக்கடி வந்து தரிசித்துச்

செல்லும் வைஷ்ணவ சமயத்தைச் சார்ந்த லக்ஷ்மணப் பெருமாளை ஓர் சமயம் சந்திக்க நேரவே பற்பல விஷயங் களைப் பேசியவாறு இருவரும் ஓர் முச்சந்தி வீட்டை நாடி அடைந்து அமர்ந்து மகான்களைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கி அளாவளாவினர். அப்பொழுது அந்திமாறி இருள் சந்திக்கும் நேரம். கனம் சுந்தர சர்மா தாம் அறிந்துள்ள வடநாட்டுச் சாதுப் பெரியாரைப் பற்றியும், அவரை யடுத்துத்தாம் உபதேசம் பெற்ற உண்மையையும் மூத்த பிள்ளையார் உபாசனையைக் குறித்துத் தாம் உயரிய ஞானம் பெற்றதன்மையையும் அதன் பயனாக விஷ ஸர்ப்பாதிகளும் கூடத் தமது தியானத்திடையே ஆனந்த மாய் ஆடி நிற்கும் தமது தவ வலிமையையும் சிறப்பித்துக் கூறியவாறிருந்தார். இவையாவும் செவி சாய்த்து கீழ் நோக்கியவாறிருந்த லக்ஷ்மணப்பெருமாள் தமது காலடியில் வால்புறம் அமைந்து நீண்டவாறு சீறிப்படமெடுத்துத் திரும்பி நோக்கிய ஓர் சர்ப்பத்தைக் கண்ணுற்றார். இதனை உடனுகக் கவனித்த சுந்தர சர்மாவும் திண்ணைக் குரட்டை விட்டுத் தெருவில் குதித்துப்பெருமாளையும் கூட பாம்பு! பாம்பு!! என்று கூவி எச்சரித்து அந்தக் கணமே கால் சென்ற வழியில் ஓட்டமெடுத்தார். இவ்வரவம் கேட்ட அக்கட் செவியும் அடுத்த கணம் பூட்டியிருந்த அவ்வீட்டி னுள் புகுந்து மாயமாயது. லக்ஷ்மணப் பெருமாளோ பக்கத்து வீட்டாரிடம் அம்முச்சந்தி வீட்டுச் சாவி பெற்று கையில் விளக்கேந்தித் திறந்து நாற்புறமும் நோக்க அஃது காணுதாயிற்று. வீரியம் பேசிய சுந்தரம் காரியத்தில் வரும்போது கலங்கியே போனார். பக்தர் களின் சம்பரக்ஷணையிடையே பாம்புருவாய் கலந்து நின்ற பையரவம் தொங்கிய பெருமாளின் காலைத் தொடாது

சுந்திரத்தின் மந்திரப் பேச்சுக்கு மாபெரும் சோதனைத் தோற்றமாய் வந்த மாயம் இம்மகிமைப் பெரியாரின் உயரிய சித்தின் பெருமை விளக்கமேயல்லவா.

சிறந்த கடவுளரின் அவதாரமான பெரியாரது இலக்கணங்களை உருவத்திலும் நடையிலும் கண்டுகொள்வது சாத்தியமோ, அவர்தமது மகிமைகள் இவ்வாற்றால் குறைவு படுமோ. குருவிலக்கணம் அனைத்தும் பூண்டு உலகத்தவர் போன்று நடித்து மேலான போாற்றல் படைத்திருப்பர். உலகிடையிருந்தும் ஒட்டார். இவ்வாறே தமது வாணாட்களில் இப்பதியெங்கணும் உலவி நின்ற உத்தமப் பெரியார், ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலய தர்ம கர்த்தாவான மஹாலிங்க சர்மா அவர்களது தந்தை ஸ்ரீமான் செல்லம் என்றழைக்கப்படும் சீரியரும் ஆவர்.

---

# 14. வேம்பில் வேலன் காட்சி.

**கனவு.**

வத்தலக்குண்டு என்ற எனது சொந்தக் கிராமத்திற்குக் கிழக்கே ஆறு மைல் தொலைவிலுள்ளது நிலக்கோட்டை எனும் பதி. இங்கு ஆண்டவன் கட்டளையால் சில ஆண்டுகள் வசிக்க நேர்ந்தது. நான் தங்கிய ஜாகாவில் ஒரு பிரும்மாண்டமான விருக்ஷம். வேம்பு அல்லது வேப்பமரம் என்பார்கள். சாகோப சாகையாய் வேரூன்றி வளர்ந்து தழைத்துக் கிளைகிளை நாற்புறமும் வீசி பற்பல பட்சி ஜாலங்களுக்கிருப்பிடமாயும், மந்திகள் கூடிப் பந்தி பந்தியாய் வந்து இராப்பகலாய்த் தங்கி

வயிற்றில் தாங்கிய குட்டிகளுடன் மரக் கிளைகளில் தாவித் திரிந்து அச்சம் சிறிதுமின்றி அசந்த சமயம் பார்த்து வீட்டினுள் புகுந்து வைத்தவர் எடுப்பது போன்று இருப்பதையெல்லாம் கபளீகரம் செய்து செல்லும். அதனை எதிர்த்துக் கையோச்சினாலோ எதிரெதிர் நின்று கூவிக் குரல் கொடுத்துப் பற்காட்டிப் போராடும் பற்பலவித இன்னிசை நாத ஒலி கிளப்பிக் கிள்ளையினங் களும், குயிலினங்களும் மற்றைப் பலவகைப் புட்களும் செவிக்கினிய கானம் புரிந்து தத்தம் பேடுகளுடன் கூடிக் குலாவி ஆங்கு நிரந்தரமாய் இருக்கும். நல்ல குளிர் நிழலைத் தந்து வீசும் தென்றலில் கலந்து அத்தரு மென்மை யான நறுமணத்தை நாற்றிசையும் பரப்பி மாசற்ற மலர் களைத்தூவி பூமியைப் பூஞ்சயனமாக்கிப் பொலிந்தது. ஓரிரவு காடாந்தகாரமான இருள் சூழ்ந்து அப்பிரதேசத் தையே கவ்விக்கொண்டிருந்தது. வீதிகளில் விளங்கும் மின்சார தீப பந்திகளும் கூட இக்காரிருளைக் கண்டு கலங்கிக் கரந்ததோ எனும்படி காணப்பட்டது. உலகினர் உறங்கி ஓய்வு கொள்ளுகின்றனர். அந்நள்ளிருளில் இடையிடையே மந்திகளின் சலசலப்பும் கேட்கின்றது. அம்மரத்தடியில் சுகமாய்ச்சயனித்தவாறு நித்திரித்திருந் தேன். சுமார் 3-30 மணியிருக்கும். எனது கனவின் காட்சியிலே குருதெய்வமாம் குழந்தைப் பெரியாரைச் சிந்தையின் மந்திரமாய்ப்பதித்து தியானித்தவாறு நித்தி ரையில் ஆழ்ந்திருந்தேன். எனது கனவின் காட்சியிலே அம்மாபெரும் தருமலைறந்து காணுத்ாயிற்று. அவ்விடம் சிறைவிரித்த நீலக்கலாப மயிலின் வானளாவி விரிந்தகன்ற ஒயிலான காட்சி பொன்னொளியுடன் பொலிந்த அதன் அழகிய தோகைக்கண்களின் மாட்சி செப்பத்தரமன்று. அதனில்

முற்றிலும் செம்பளவ மேனியாய் அகண்டாகாரமான தமது வடிவனைத்தும் தோன்ற மிகமிகப் பெரிய உருவில் வேல்காந் தாங்கி அழகனைத்தும் ஒருருவாய்த் திரண்டு வந்ததோ எனும்படி முறுவல் பூத்த முகமாறுடைத்தேவன் எம்மிறை முருகவேள் தமது இருபக்கலிலும் அம்மையார் இருவர் புடைசூழ அமைந்து பொலிய அமர்ந்து ஜோதிர் மயமாய்க் காட்சியளிக்கின்றார். அவ்வரிய அற்புதக்காட்சியை அந் நிலையில் வலியக் கண்ட நான் ஆண்டவனைக்கூவி யிறைஞ்சு கின்றேன். அவர் தமதடியிணைகளில் பணிகின்றேன். ஆர்வ மிகக்கொண்டு குறை யிரக்கின்றேன். குதூகலமாய்க் கொண்டாடுகின்றேன். பாடிப்பரவுகின்றேன். அடுத் தடுத்து வரம்பல கோரி விண்ணப்பிக்கின்றேன். உத்தமப் பக்தர்களைச் சிந்தித்து அவர்களும் இவ்வரிய காட்சியைக் காணப் பிரார்த்திக்கின்றேன். அச்சமயம் சென்னையில் சிறப்பாய்த் தங்கிய சாரதையையும் மனத்தில் நினைந்து உடனாக வந்து குமரவேலைத் தரிசிக்க நினைவு கூறுகின்றேன். வியப்பினும் பெருவியப்பாய் அக்கணம் குமாரி சாரதையும் அவளது கனிஷ்ட சகோதரி ஸ்ரீமதி விசாலமும் ஆங்கு விஜயம் செய்கின்றனர். "அன்பிற் சிறந்த என்னருங் குழந்தை களே! உங்களை இக்கணம் சிந்தித்தேன்." ஆண்டவனரு ளால் அவர்தமது விராட்விஸ்வரூபத் திருமேனியை நான் தரிசித்தவாறு எனக்குக் கிடைத்த இவ்வரிய சேவையை நீவிரும் காண நினைந்தேன். அவ்வாறே ஆண்டவனும் அருள் செய்தார். உங்களுக்கும் இக் காணுதற்கரிய சேவையைப் பிரசாதிக்க இங்கு கொண்டுவந்து சேர்பித்தார். அந்தியின் அழகுமிக்க நீலவானம் விரிந்த காட்சியாக அழகிய மரகத கலபத்தோர் மாமயிலை வந்தெதிரப்படும். செந்தி வேலனின் சிறந்த தரிசனம் காணுங்கள். அவர் தமது

சீர்பாத சேவை பூணுங்கள். அவர் தமது புன்னகை தவழும் முகார விந்தமும், நமதன்னையர் இரு மருங்கும் காணும் இணையிலாத் தோற்றமும் பாருங்கள். ஜென்ம சாபல்யமல்லவோ இவ்வருங் காட்சி. உங்களை நான் சிந்தித்ததே போன்று ஈசனும் அனுக்கிரகித்தார். உங்கள் பாக்கியமே பாக்கியம். எவருக்குக் கிடைக்கும் இந்த சிலாக்கியம் என்றவாறு ஆனந்த மேலீட்டால் உறக்கக் கூவி விழித்தேன்.

இக்கனவின் காட்சிக்கப்பால் நித்திரை செய்யாது தியானபரனாக இருந்து பின்னர் எழுந்து ஸ்நானம் முதலிய எனது கடமைகளை முடித்து ஊர்நோக்கி புறப் பட்டு வந்து சேர்ந்தேன். ஆலயம் சென்று ஸ்ரீ குரு தேவரைப் பூஜிக்க நினைத்து புஷ்பம் வாங்கக் கடைவீதி சென்று ஆங்கோரிடத்து அமர்ந்தேன். அவ்வமயம் அயலூரார் ஒருவர் என்னிடம் விரைந்துவந்து சந்தித்தார். "தங்கள் வீட்டிற்குச் சென்றேன், ஆங்குத் தங்களைக் காணவில்லை, இங்கு ஒருக்கால் இருக்கக்கூடும் என்று எண்ணிவந்தேன். தற்செயலாகத் தங்களை இங்குச் சந்தித்தேன்" என்றார். நான் இப்பொழுதுதான் நிலக் கோட்டையினின்றும் திரும்பினேன். யாது விஷயம்? என்றேன். அவர் "ஐயா! நான் இப்பொழுதுதான் குழந்தைமா நகரினின்றும் திரும்புகிறேன். தங்களுக்கு செய்தி கொண்டு வந்துள்ளேன். சென்னையிலிருந்து இன்று காலைதான் ஸ்ரீமதிகள் சாரதையும் விசாலமும் வந்திருக்கின்றனர். அவர்கள் தங்களைச் சந்திக்க விரும்பி என்னிடம் சொல்லி அனுப்பினார்கள். தயை செய்து அவர்கள் கோரியபடி ஆங்குச் சென்றுவாருங்கள். இதனை

யாவும் கேட்ட நான் "ஐயா! நானும் நேரில் அவர்கள் இருவரையும் நேற்றிரவு கனவின் காட்சியிலே ஆண்டவன் திருமுன்னர், தரிசனைக்கு விரும்பிக் கோரினேன். அவ்வாறே அவர்களும் சென்னையினின்று வந்து ஆண்டவனது தரிசன சேவை பெற்றனர். ஆனால் தற்சமயம் நினைவின் காட்சியிலே அவர்கள் சென்னையின்றும் மீண்டதாய் நீவிர் செப்ப அஃது நிதர்சனமாயிற்று. யாவும் ஆண்டவன் செயல் அவரது திருவுளம்போல் யாவும் நடைபெறுகின்றது. இச்சம்பவமும் அவர்தமது திருவுளத்தடைத்த பெருங்கருணையே," என்று மனமாற வியந்து கூறி அவருக்கு விடையும் தந்து, பின்னர்

ஆலயம் சென்று குருநாதன் திருவடி பணிந்து பூசித்து அப்பால் குழந்தைமா நகர் நாடிச் சென்று அவ்விரு பக்தைகளுக்கும் நான்கண்ட அந்நற்காட்சியை விளம்பித் திரும்பினேன். இம் மண்ணிடை வேம்பாய் நின்று பின்னர் வேலனாய் மாறி விரும்பியே காட்சியும் தந்து எனது சங்கற்பத்தையும் சாதித்தருளி சோதித்தருவாய் சொருபங்காட்டிச் சுந்தரரூபச் செந்திருமேனியாய் வந்தனர் என்றன் கனவுக் காட்சியிலே கந்தநாதனாய்க் குழந்தைக் குருபரன்.

---

## 15. பாலரச பானம்.

குழந்தை மாநகரில் மஹாத்மா அன்பர் பல்லோர் சூழப் பக்தர் இல்லங்களில் ஆங்காங்கு சென்று வீற்றிருந்து காட்சியளிக்கின்றார். அச்சமயம் கனம் ஜமீன்தார் அவர்களது தாயாதி வர்க்கத்தினரான துரைசாமி, பிரபல வைத்திய சிகாமணி அவரைக்காண

வந்தார். மஹாத்மாவின் சிறந்த மகிமைகளை விசாரித்து அறிந்த அவர் நேரில் காண மஹாத்மாவை அணுகினார். இவர் நாடிப் பரீட்சை பார்ப்பதிலும் வைத்தியம் புரிவதிலும் நிகரற்ற பாண்டித்யம் உடையவர். இவரது வருகையறிந்த நம் பெரியார் தமது நாடி பார்த்துரைக்கக் கட்டளையிட்டார். தாம் கோரிவந்த எண்ணம் கைகூடியதையுணர்ந்த வைத்திய சிகாமணியைத் தமது திருவுளத்தால் நன்குணர்ந்த பெரியார் அவரிடம் தமது பூதவுடலைப் பரிசிக்க விடுத்து வாளாவிருந்தார். அவரது பூதவுடலை நன்கு ஆராய்ந்துகொண்டிருந்த வைத்திய துரைசாமி இரும்பினுங்கடிய அவர்தம் பூதவுடலையும் கால் கரங்களையும் நன்றாக அழுக்கிப் பிடித்து ஆங்காங்கு பலவிடங்களில் நாடிகளின் இருப்பையும் அதன் போக்கையும் உறுதியையும் ஊன்றிக் கவனிக்கலானார். இவரது உள்ளக் குறிப்பையும் சோதனை காணவந்த தன்மையையும் உணர்ந்தவாறு மகாத்மா நாடிகளின் ஓட்டத்தையனைத்தையும் காணாதவாறு தடுத்து நிறுத்திப் புன்முறுவல் பூத்தவாறு இறுதியாகத் தமது கரங்களையும் நாடிப்பார்க்க அளித்துவிட்டார். அவரது குறுகிய உருவையும், கணத்த தொந்தி வயிற்றையும் சுருங்கி விரியாது நிலைத்திருந்த பிராண பானாதி தசவாயுக்களின் ஓட்டத்தையும் அதன் ஆர்ப்பாட்டத்தையும் வெகு நேரம் கவனித்த வாறாயிருந்து இறுதியில் "என் சுவாமி, நாடிகளின் போக்கே காணவில்லையே, தேகநிலை என் இவ்வாறு உள்ளது. தங்களுக்குத் தேக அசௌக்கியமும் காணப்படுகிறதே, பேதிக்கு உட்கொண்டு வெகுகாலம் ஆகிறது போலிருக்கே? வாத பித்த சிலேத்துமங்களின் பிணிப்பு அதிகம் காண்கிறதே. நாடிகளைக் கொஞ்சம் சுத்தம் செய்துகொண்

டால் உடம்பு இவ்வளவு கனக்காது. தங்கள் உருவுக்குத் தக்கபடி தேகம் பூச்செண்டு போல் கனமின்றி இருக்கும். வாக்கிலும் மற்றைத் தேகப் போக்கிலுங் கூடத் தெளிவு காணும்" என்றவாறு மேலும் மேலும் வைத்தியப் போக்கில் தாமுணர்ந்த அகராதி வார்த்தைகள் அனைத்தும் படித்துப் பெரிய பிரசங்கம் புரிந்து, இடையே அவர் தமது ஆண்குறியை (பீஜத்தையும்) ஒரு முறையாகப் பன் முறையும் தாங்கி நிறுத்தித் தூக்கி நாடிபார்த்தவாறிருந்தார். இதனையாவும் ஒருங்குணர்ந்த நமது குலதெய்வம் "நல்லா பாரப்பா, உடம்பு நல்லா தினில்லே பேச்சிலும் நடையிலும் நாடிப் போக்கிலும் நீ சொல்றுப்பிலே அப்படித்தானிருக்கு நாடிச்சுத்தியும் பார்க்கணும். குடலும் சுத்திசெய்யணும். பழைய மலத்தைப் போக்கணும். அதுக்கு வழி ஒன்னுலேதான் பெறக்கணும். ஏதாவது பேதி மருந்து இருந்தால் கொடப்பா. சாப்பிட்டுக் கழிக்கிறேன். நானே நெனைச்சேன். நீயாகவே வந்தது நல்லதாப் போச்சு. நல்லா போறுப்பிலே மருந்து கொடப்பா நீதான் வச்சிருக்கியே பேதி மருந்து ரொம்ப ரொம்ப நல்லதா அந்த பாலரஸமேதான். அதையே கொடப்பா. சாப்பிட்டுப்பாக்கிறேன்." என்றார் பகவான் ஸ்ரீ குழந்தைப் பெரியார்.

அண்டாசயத்தில் தமது பிடி தாங்கி அமைந்தவாறு மகாத்மாவை நாடிப் பரீக்ஷைபார்த்திருந்த அந்த துரை வைத்தியர் "ஆமாஞ்சாமி நானும் அதையேதான் கொடுக்கணும்னு நினைச்சது. தாங்களும் அந்த உயர்ந்த பேதி மருந்தையே குறிப்பிட்டுவிட்டீர்கள். இதோ தருகிறேன். உட்கொள்ளுங்கள். இதற்கு அனுப்பானம் ஏதுமே

தேவையில்லை. இந்தாருங்கள்" என்றார். தம்மைச் சோதிக்க வந்த அந்த வைத்திய நிபுணர் தந்த மிக மிக உயர்ந்த பேதி மருந்தை, பால ரசத்தை, பழைய மலத்தை நீக்கத் தந்த அந்த ஔஷதத்தை மும்மலம் போக்கி முத்திக்கு வித்தாய் நின்ற அம் முழு முதற்கடவுள் கரத்திலேற்று உட்கொண்டார். "அப்பா துரை மருந்தும் அருந்திவிட்டேன் எத்தனை தடவை பேதியாகும்" என்றார் பகவான். சுமார் நான்கு அல்லது ஐந்து தடவைகள்தான் பேதியாகும். வேறே யோசிக்காதீங்க. அதிகமாப் போயிடுமேன்னு பயந்துடாதீங்க உடம்பும் நாடிகளும் பிறகு தெளிவாயிடும் நல்ல மருந்துங்க. இனிக் கவலையே வேணும். நான் உத்திரவு பெற்றுக்கொள்ளுகிறேன் என்றான் துரை வைத்தியன். அப்படியே செய்யப்பா என்று கூறி விடையளித்துவிட்டார். வைத்திய துரையும் வடகரை நோக்கிப் புறப்பட்டுவிட்டார் தமது மருந்துப் பையுடன். போகும் போதே மகாத்மாவைச் சிந்தையில் வைத்தே நடந்தார். "இம்மருந்து இவரை எமபுரியையே எட்டிப் பார்க்க வைக்கப்போகிறது. இவரைச் சோதிக்க நாம் எண்ணியபடி இதனையே இவரும் கேட்டுவிட்டார். இதன் மகிமையை இவரென்ன கண்டார். மனுஷன் அசந்து போவார். தாது விழுந்து போகும். மகான் மகான் என்று கொண்டாடும் இவரை நாமும் பார்க்கப் போகிறோம். நமது சாமர்த்தியம் இவரிடந்தான் விளங்கப் போகிறது. பிறகு போய் அவரது நாடி ஓட்டம் பார்க்கணும். அசந்த போக்கை நாலுபேரறிய ஆக்கணும். கூசாமல் நமது மருந்து மகிமையை எல்லோரும் காணணும். வைத்தியப் போக்கில் நமது யோக்கியம் யாருமறியணுக்கணும்." என்று எண்ணியவாறு ஏகினார்.

மகாத்மா இங்கு பாலரசம் உட்கொண்டு காலை முதல் மாலை மணி ஆறுகியும் பேதியாகிக் கொண்டே இருந்தது. வயிற்றின் போக்கு நிற்கவேயில்லை. கணக்கி லடங்காமல் காறுறுபோல் போக ஆரம்பித்துவிட்டது. அம்மனையிலுள்ள ஆண் பெண் பாலர் அடங்கலுங் கூடக் கலங்கிக் கண்ணீர் வடிக்கலாயினர். துரைக்குத் தூதனுப்பவும் கூடத் தொடங்கினர். அவர் வந்தபா டில்லை. பக்கத்தூருக்குப் பயணமான செய்தியுமறிந்தனர். அற்றை நாளிரவும் கடந்தது. வீட்டிலுள்ளாரும் அங்கு வந்து தெரிசனம் காணவந்த பக்தர் கூட்டமுங் கூடப் பீதியடைந்தனர். மகாத்மாவின் நிலைகண்டு பரிதாபங் கொண்டனர். மற்றை நாள் மாலை வைத்திய துரையும் வந்து சேர்ந்தான். வைத்தியர் மீது எல்லோரும் விசை யாய் வசையம்பு தொடுக்கலாயினர். ஜோல்ணுப் பையை அண்டையில் வைத்துவிட்டு வைத்தியர் மகாத்மாவை உற்று நோக்கினர். தமது பாலரசத்தின் வேகம் அவரது பூதவுடலின் வெளித் தோற்றத்தில் ஏதும் மாறுபாடு காணவில்லை. பக்கலிலணுகி, மகாத்மாவுடன் பேச்சுக் கொடுத்தான். பேச்சுறுதிக்கும் குறையைக் காணோம். உடலை ஸ்பரிசித்து நோக்கினன். ஆயினும் உடலில் தளர்ச்சி ஏதும் காணவில்லை. எப்போதும் போல் மகாத்மாவும் அடியார் பலருடன் அளவளாவி வாசியில் நேசமாய் சுரணை மிழுத்துப் பல விஷயங்களை பரிசீலனை செய்து முக்கால வர்த்தமானங்கள் முழுதும் விஸ்தரித்திருக்கிறார். "சாமி பாலரசம் எப்படி இருக்கு? சரியாய்ப் போச்சுதா? உடம்பு தெளிவு ஆச்சுதா? இப்பொழுது நாடி பாக்க லாமா? சாமி கை கொடுக்குமா?" என்றார் வைத்திய துரைச்சாமி. "ஏனப்பா துரைச்சாமி மருந்தைக்கொடுத்து

விட்டு இராப்பகல் ரெண்டு நாளா நீ எட்டிப் பார்க்காமல் இருந்துட்டியே, நானே கிழவன். பேதியோ கரை கடந்து போச்சுது. நாடி அசந்து போச்சுது. உசிருக்கே முடிவு வந்துடுத்து. இந்த உடம்பு தாங்குதாப்பா நல்ல வேளை. இப்பவாவது நினைச்சு வந்தியே. நாடியைப்பார்த்துப் பேதியை நிறுத்த வழி பண்ணப்பா, அதுவும் வந்த எடத்திலே பாவம் இவங்கள்ளாம் பயந்தே பூட்டாங்க கொல்லைக்கும் வாசலுக்கும் நானும் நடந்தாண்டு அலுத்துப் போனேன். இவங்களுக்கும் ராப் பகலாத் தூக்கம் கெட்டுப் போச்சுது. ஆனா எனக்குப் பரவாயில்லை. இவங்களுக்காக வேண்டியாவது நீ வந்து எட்டிப் பார்க்கவேண்டாமா?" என்றார் நம்மையாளவந்த தயாநிதி. இதனை யாவும் கேட்ட வைத்திய துரை "மன்னிக்கணுங்க, மனசு இங்கெதானுங்க. போன எடத்திலே எதிர்பாராமெ தாமதப்பட்டுதுங்க. இப்பதான் என்ன? ஒரு விநாடியிலே நாடியைப் பார்த்துப் போக்கைக் கண்டிச்சுப் பிடறேனுங்க. நீங்க கலங்காதீங்க கொஞ்சம் கையைக் கொடுங்க பார்க்கலாம்" என்றார். மகாத்மா வைத்திய துரையிடம் கரத்தையளித்து விட்டு மௌனமாயிருந்தார். வீட்டாரும் மற்றையோரும் ஆவலாய் இதனைக் கவனித்தவாறிருந்தனர். நாடியைத் தேடிக்கண்டுபிடிக்க அன்று போலின்றும் முயன்ற வைத்தியர் வாத பித்த சிலேத்தும நாடிகளின் ஓட்டத்தை வெகு நீண்ட நேரம் ஆராய்ந்தும் பிடிபடக் காணோம். வைத்தியர் பைத்தியர் போன்று முணுமுணுத்தார். அனைவரையும் ஒருமுறை சுற்றிநோக்கினார். "ஓட்டங் காணோமே, எனிப்படி சாமி நாடி இருக்கிற எடமே தெரியல்லையே. ஆனா சாமி நல்லாத்தான் ஒக்காந்து பேசிக்கிட்டு இருக்குது. கையைப் பாத்தா உசிருக்கே மோசம் வந்தது

யிருக்கு. ஒன்னையுமே காணோம். இதுலே ஏதோ சூது இருக்குதுங்க. இன்னும் நல்லாப் பார்க்கிறேனுங்க. நான் வைத்தியம் பண்ணி இதுநாள் வரையிலே இப்படி இருந்த கைநாடி மாதிரி ஒருபோதும் பார்த்ததில்லே. இத்தனை தடவை பேதியாகியும் சாகாமே ஆவி போகாமே, கட்டையைக் கீழே போடாமே இப்படி இருக்கிறது எனக்கே ஆச்சரியம் தான். இதுலே ஏதோ மர்மம் இருக்கிறது சாமி. பலே பலே பெரிய ஆசாமி போலே இருக்கு நீங்க. அன்னைக்கே கொஞ்சம் கவனிச்சேன். நாளும் ரெண்டாச்சு. பேதியும் கணக்கிலே நிற்காமேப் போயிருக்கு. ஒடம்பிலே ஒட்டின உசிரும் உருப்படியா ஒட்டம் தெரியாமே நிக்குது. இத்தனை தரம் பேதியான துக்கு ஆளைக் கீழே படுக்க வைத்து படுக்கையிலே பேதி யாகிக் கிட்டே உசிரும் பிரிஞ்சிருக்கணும். இவங்களைக் கடவுளுக்கு ஒப்பந்தமாத்தான் சொல்லணும். எம்மாதிரி வைத்தியர்கள் மருந்துகள்லாம இவங்கமாதிரி பெரியவங் களுக்கில்லே சாமி. கொஞ்சம மனது வைச்சாத்தான் உண்மை புரிபடுங்க" என்றார் சுவாமியை நோக்கி. "ஏனெப்பா நான் செத்தா பூட்டேன். நீ பேசாது எனக் குப் புரியலையே. கையை நல்லாப் பாரப்பா." என்றார். நாடிகளை ஒவ்வொன்றாய்த் தெளிவு பெற அமிழ்த்தார் மகாத்மா ஊடுருவ கவனித்த துரையோ நாடிகளின் அந்த நிலைமையிலும் அதன் அபாரமான வலிமையையும், அதன் இணையற்ற தங்குதடையற்ற போக்கு வரத்தையும் நமது பெரியாரின் தீர்க்க ஆரோக்யத்தையும் ஆயுளின் நீட்சி யையும் அவரது அபார ஆற்றலையும் அவையனைத்தையும் தம்முள்ளடக்கி ஆட்சி புரியும் அவர் தமது மகிமைப் போக்கையும் ஆழ்ந்து கவனித்து அனைவரும் கேட்க

அறிவித்துத் தனது மடமையின் காரணத்தால் அவர் தம்மைச் சோதித்த விதத்தையும் விவரித்துக் கூறித் தன்னை மன்னிக்கும்படி மன்றாடி அவர் தமது இணையற்ற அடிகளில் வீழ்ந்து பணிந்து பன்முறை வேண்டினன். நம் குழந்தைப் பெரியாரும் அவர் தமைக் கடைக் கணித்து மெச்சி ஆங்குளோர் அனைவரும் கண்டு அற்புதம் அற்புதம் என்று போற்ற எல்லோர்க்கும் பேரருள் புரிந்து போற்ற வீற்றிருந்தார். சகல ஜீவான்ம கோடிகளின் இருதயத்தினுள்ளும் சாந்நித்தியமாய் சர்வ வியாபகமாய்ச் சதா நிவாசம் புரிந்தருளும் ஸ்ரீமந் நாராயணனே திருமேனியாய் ஸ்ரீ முருகன் என்னும் பொருளின் இலக்கணமாய்ப் பொலிந்த நம் குழந்தைப் பெரியாரைச் சோதிக்கவும் அவர்தமை முற்றிலும் அறிதலும் கூடுமோ? அவனருளால் அவன்தாள் போற்றி அநுக்ரஹம் பெறுதலே மானிடர் தமக்குறிய மாண்பாகும். தமதரிய பெரிய வைத்திய முறையில் ஔஷதங்களினாலோ தாம் கற்றறிந்த நூலினளவான மந்திரங்களினாலோ அவர்தமைப் பிணித்தலும் சாத்தியமோ? அவர் தமது திருவருளாலன்றி இவையனைத்தும் பலன் பெறுமோ? ஈசனது திருவுருவாய் வந்தவதரித்த இத்தகைப் பெரியாரிடம் நமது கவிதைப் போக்கைப் போன்ற ஆணவங்களைந்து குழந்தையே போலாகிக் குறுகியிருந்து அவர்தம் பேரருள் சிறக்கப் பெறுவோமாக!

---

## 16. மாறுதல் உத்திரவு.

கல்வி இலாகாவில் மேற்பார்வையாளராக (சூபர்வைசர்) ஸ்ரீமான் ரங்கநாதம் அவர்கள் உத்யோகம் வகித்திருந்தார். எனது சொந்த ஊரிலுள்ள பாடசாலை

யில் நான் உதவியாசிரியனாக வேலை பார்த்திருந்த சமயம் பிற்பகல் சுமார் 2 மணிக்கு அவர் பாடசாலையைப் பார்வையிட வந்திருந்தார். ஆஜர் பட்டியில் அச்சமயம் கையொப்பமிட வந்திருந்த நான் அவரைக் கண்டு வணக்கம் செய்து திரும்பினேன். அவரது தோற்றத்தைக் கவனித்த நான், "இன்னும் உணவருந்தவில்லையோ? வெகுதூரம் பிரயாணம் செய்து களைத்து வந்ததாய்க் காண்கிறதே" என்றேன். அவர் அதற்கு உத்தரமாக, "ஆமாம், ஆறு மைல் தொலைவிலுள்ள ஓர் ஊரிலிருந்து வருகிறேன். வழி நடந்த களைப்புடன் யாவுந்தான்" என்றார். உடனே நான் எனது தலைமை ஆசிரியரிடம், அவருக்கு நான் செய்ய விரும்பியவற்றைத் தெரிவித்து அனுமதியும் பெற்றேன். உடனே அவரை அழைத்துச் சென்று அன்னபானாதி வகைகளை அவருக்கு கவனித்து அளித்து மற்றும் வேண்டியவற்றைச் செய்து பாடசாலைக்கு மீண்டேன்.

இச்சம்பவம் நடந்து ஒருவாரம் கடந்தது. தலைமை ஆபீசிலிருந்து எனக்கு ஓர் உத்திரவு வந்தது. அஃது எனக்கு மாறுதல் உத்திரவு என்று அறிந்தேன். அதுவும் ஆண்டவன் கட்டளையே என்று மனமுவந்து ஏற்றேன். அச்சமயம் இதனையறிந்த தலைமை ஆசிரியர் சொல்லியதாவது :- "வெங்கட்ராம! உன் வீட்டிலேயே சாப்பிட்டு விட்டு இங்கு திரும்பிய அவர் உன்னையே அந்த ஆறுமைல் தொலைவிலுள்ள அவ்வூருக்கு மாற்றிவிடத் தாம் எழுதப் போவதாகச் சொல்லிச் சென்றார். ஐயோ பாவம், இதை நீ அறியாய். என்ன மனிதன்! காருண்யமற்றவன்" என்றார்.

யாவும் ஆண்டவன் திருவுளம் என்று சொல்லி முடித்து உத்திரவு பெற்றுத் திரும்பினேன். "குருசரிதம்" என்னும் நூலில் "உபதேசம்" என்னும் தலைப்புடைய அரிய மௌனோபதேசத்திற்கு இதுவே ஆதிகாரணம். சில தினங்களுக்கப்பால் அவ்வூர் சென்று பாடசாலைப் பொறுப்பனைத்தையுமேற்றுத் தொழில் நடத்திவந்தேன். இவ்வாறு மாதங்கள் ஆறுங் கடந்தது. "வல்வினையேன் கால் சலித்தேன்" எனப் பட்டினத்தடிகளார் செப்பியது போல் அக்கிராமத்தில் குடியிருக்க நிழலுங் கிடைக்காது குடும்பம் பிழைக்க வருவாயும் போதாது வகையின்றி வாணாள் கழித்திருந்தேன். ஆயினும் எனது சிந்தையின் மந்திரமாகி நின்ற கந்தவேள் கடவுளாம் குழந்தைப் பெரியாரைக் குறிக்கொண்டேயிருந்தேன். இவ்வாறமைந்த காலத்தில்தான் எனக்கு உரிமையாக, ஆண்டவன் அளித்த மௌனோபதேசமும் பூர்த்திபெற்றது. நான் வீட்டில் தங்கிய விடுமுறைநாள் ஒன்றில் நண்பர் ஒருவர் என்னைக் காணவந்தார். அவருடன் சம்பாஷித்திருந்த சமயம் அவர் முருகனது அருட்டிருமேனி பூண்டவராகித் திகழ்ந்தார். "குழந்தாய்! உனக்கு இப்போது அழைப்பு வருகிறது. நாம் எண்ணியவாறு உன்னை அழைத்துச் சென்று தனிமையில் இருந்து ஒப்பற்ற மௌனோபதேசமும் புரிந்து பூர்த்தி செய்வித்தோம். இனி நாம் உன்னை உன் இருப்பிடத்திலேயே வைக்கத் திருவுளம் கொண்டோம்" என்றனர். "என் ஆண்டவனே, தமது திருவுளம் என் பாக்கியம்" என்றேன். இவ்வாறு எங்கள் சம்பாஷணை இடையே தலைவாயிலில் ஒருவர் என்னை அழைப்பதாய் அறிந்து சென்றேன். விஷயம் விசாரிக்கையில் போர்டின் தலைவர் என்னை உடனுக

அழைத்துவரக் கட்டளையிட்டதாகவும் எனக்காகக் காத்திருப்பதாகவும் அறிவித்துச் சென்றார். என்னுடன் சம்பாஷித்திருந்த பக்தரும் என்னைத் தொடர்ந்தார். அதிகாரிகளும் எனக்குத் திரும்பவும் வத்திலக்குண்டிற்கே மாற்றிய விபரம் நேரில் என்னிடம் சொல்லிச் சென்றார். ஆனால் அவர் செப்பியதுபோல் உடனுகத் தலைமை குமாஸ்தாவோ எனக்கு எழுத்து மூலம் உத்திரவு அளிக்காமல், "போய் வாரும் உத்திரவு வரும்" என்று அனுப்பி விட்டார். ஊர் நோக்கி மீண்டேன். மற்றை நாள் ஆதவன் வடதிசை நோக்கிப் புறப்படும் நன்னாள். அந்தப் புனித தினத்தை "ரத ஸப்தமி" என்பர் மேலோர். உத்தராயனம் எனப்படும் இவ்வாறு மாதங்கள் மகா மகா சிரேஷ்டமான காலம. அந்த சுபதினத்தில் எனது அனுஷ்டானங்கள் யாவும் முடித்தும் பாமனை பூஜித்த வண்ணம் விசேஷ நிவேதனங்களுடன் சந்நிதியில் அமர்ந்திருந்து திருப்புகழ்ப் பாசுரங்களால் பாடிப் போற்றிப் பரவசனாகியிருந்தேன். அவ்வமயம பக்தர் ராயர் சுவாமிகள் பின்தொடர கனம் ரங்கநாதம் அவர்கள் சந்நிதி வந்தடைந்தார். எட்டுறுப்புந்தோயப் பலகால் பணிந்தெழுந்தார். கூப்பின கையினராய் என்னை நோக்கி அடியில் வருமாறு தெரிவித்தார். "ஐயா, தமக்கு நான் இழைத்த பெருங்கொடுமையை மன்னித்தருள்க. தமது கிருகத்திலேயே உணவுண்டு தமக்கே மாறுதல் உத்திரவு அளித்து பல தொந்தரவுகளுக்குத் தம்மை ஆட்படுத்திப் பெருத்த அபராதம் செய்துவிட்டேன். அன்பிற் சிறந்த அடியார் படும் துன்பத்தை பரம கருணாநிதியான முருகனுங் கண்டு பொருத்தருள்வாரோ? அதன் பலனைத் தற்காலம் நான் முற்றிலும் அனுபவிக்கிறேன்" என்றார்.

"தாங்களோ அதிகார வர்க்கத்தவர். எதுவும் இஷ்டம் போல் செய்யலாம். அதில் தவறு என்ன இருக்கிறது? தங்களுக்கு இது காரணத்தால் வந்த கஷ்டம என்ன? தங்கள் கவலைக்குக் காரணம் யாது?" என்றேன். ஐயா, நீங்கள் நிறைந்த உள்ளம் பொருந்தியவர். நீவிர் இதனை அறியமாட்டீர். தங்கள் பாதங்கள் நோக யானே செய்தேன். அதற்கு மூலகாரணம் யானே தான். அதன் பயனாக எனது மனையாள் சென்ற சில வாரங்களாக நடக்க இயலாதபடி பெருந்துடையில் புறப்பட்ட புண் மிக மிகப் பெரியதாகி இதுகாறும் உடையாமலும், இராப் பகலாய் ஊணுறக்கமின்றிப் பொறுக்க இயலாத வலியும் வருத்தமும கொண்டு அலறுகிறாள். எனது பரிகாரங்கள் எதும் பயன்படவில்லை. இவ்வாறாகிய சமயம் நேற்று மாலை இப்பக்தர் எனது கிருகம நாடிவந்தார். முருகன் அருள் பூரணமாய் நிறயப் பெற்றார். அந்நிலையில் பகவான் திருவாய் மலர்ந்தருளியதாவது, "எனதன்பிற் சிறந்த பக்தன் அந்தக் குழந்தையை கால் நோவ நடக்க விடுத்தாய். நீ சுகமாய் உன் இஷ்டம்போல் உத்திரவு போட்டுக் கவலையின்றி இருக்கின்றாய். அவன் கால் நோவ நாம் சகிப்போமா? உன் மனைவிக்கு வந்த இதனைப் பொறாது இத்தனை மனத் தாங்கல் அடைகிறாயே, இவ்வாறு தானே அவனும வருந்தியிருப்பான். இதனை நீ அறியாயோ? நீ அறிதற்பொருட்டே நாம் இச் சோதனையைக் உனக்குக் காட்டினோம். பரிகாரம் வேண்டினால் உடனாக உத்திரவுடன் அந்த பக்தன் இல்லம் செல்லக் கடவாய். மாறுதல் உத்திரவும் உடனாக அளிக்கக் கடவாய். காலில் பணிந்து அவன் மனம் மகிழ மன்னிப்புக் கோரக் கடவாய். அவனிடம் திருநீரும் பெற்று நலம் பெறக் கடவாய்." என்பதாக ஆண்டவன் அருளிய அத்திருவாக்கை என்பால் உரைத்தருளினர்.

இதனையாவும் செவிக்கொண்ட நான், அடியார்களிடத்தில் ஆண்டவன் கொண்ட அன்புகடந்த பிரேமையை எண்ணி எண்ணி இணையிலாப் பேரின்ப வாரிதியில் ஆழ்ந்து, அவரை நோக்கி, “அன்பரே, ஒருவருக்கு மற்றொருவர் இன்னல் புரிவதும் கூடுமோ? தாம் எனக்குச் செய்த தாய்ப் பச்சாத்தாபப் படுதல் நியாயமேயின்று, தாம எனக்குப் பெரிதும் உபகாரமே புரிந்துள்ளீர். சிறிது ஆலோசித்துப் பாருங்கள். தாங்கள் அவ்வாறு எனக்கு மாறுதல் உத்திரவு அளித்திராவிடில் ஆண்டவன் இந்த மேலான மௌனோபதேசமும் எனக்குச் செய்தல் கூடுமோ? எத்தனையெத்தனை ஆர்வமுடன் என்னை அங்குத் தனிமையில் அழைத்துச் சென்று பலவகை ஆசனக் கிரமங்களோ, ரேசக பூரககும்பக ரூபமான பிராணயா மாதி அஷ்டாங்க யோக முறைப் பயிற்சிகளோ அத்தனை யும் அருகில் இருத்தி ஆர்வமுடன் உபதேசித்துக் காண்பித்தருளினரே. எட்டு நாள் இராப்பகலாய் இணைபிரியாதிருந்து என்னைக் கடைக் கணித்தருளினரே. இவையெல்லாம் உம்மால் வந்தடைந்த எனதருள் பாக்கிய மல்லவோ. நீரோ எமக்குத் தீமை செய்தீர். மேலான நன்மையே யல்லவோ நான் பெற்றேன். இத்தகைய பேருதவிக்கு யானுமக்கு என்ன கைமாறு செய்யவல் லேன். என்னாண்டவன் உமது மனக்குறையைத் தீர்த் தருளி ஆட்கொள்ளக் கடவாருக. ஆண்டவனே உம் மிடம நேரில் தோன்றி அநுக்ரஹிக்கப் பெற்றீர்கள். கவலை இனி உங்களுக்கு வேண்டாம். அன்றுபோல் இன்றும இன்பமாக இங்கு என்னுடன் இருவரும் உணவு கொள்ளுங்கள். பஞ்சாட்சரமும் பெற்றுச் செல்லுங்கள். இரணம் தீர நீறு பூசுங்கள். இந்நேரம் உங்கள் காதலி சுகமுற்றிருப்பாள். இரணமும் உடைந்திருக்கும்.” என்று சாற்றி போஜனமும் செய்வித்துத் திருநீரளித்து

அனுப்பினேன். ஆகவே, ஆண்டவனை அன்புடன் ஆராதியுங்கள். அவர் தமது அன்பைப் பெற முயலுங்கள். பிறப்பு இறப்புக்காளாய் வந்த இந்த பவ நோய்க்குத் திருநாமம் ஐந்தெழுத்தும் ஓதித் திருநீறணியுங்கள். சித்த சுத்தியும் பத்திப் பதமும் முத்திப் பேரும் முழுதும் பெறலாம்" என்று பிரியமுடன் சொல்லியனுப்பினேன். விபூதிப் பிரயோகத்தால் பூரண குணமாகி அம்மட நல்லாள் சுகம் பெற்றதாக கனம் ரங்கநாதம் அவர்கள் அனுப்பிய செய்தியுமறிந்து ஆண்டவன் திருவருளைச் சிந்தித்து வந்தித்தேன்.

---

## 17. மகாத்மாவின் அன்பளிப்பு.

1919-ம் ஆண்டில் மகாத்மா இவ்வூருக்கு விஜயம் புரிந்த விஷயம் ஏற்கனவே படித்திருப்பீர்கள். அந்த விசேஷ சந்தர்ப்பத்தில்தான் ஒரு சமயம் ஸ்ரீமான் சுப்ரமண்ய சர்மாவைச் சந்திக்க நேர்ந்தது. இவரைப்பற்றிய விவரங்களைச் "சக்ரம் பார்த்தல்" என்ற அதிகாரத்தில் நீங்கள் படித்திருக்கக் கூடும். மகாத்மா இங்கிருந்து மீண்ட பின்னர், அவரது ஞாபகார்த்தமாக அவரது உருவப் படம் பெற வேண்டிச் சிந்தித்து வந்த நண்பரிடம் பிரஸ்தாபித்தேன். அவர் "மதுரைக்குச் சென்று பெறலாம். இப்போதே புறப்படுங்கள்" என்றார். கையில் பிரயாணத்திற்கே காசில்லாத நான் கவலையிலாழ்ந்தேன். ஆனால் நண்பர் அவ்வுதவியைத் தாமே செய்வதாக வாக்களித்தார். பின்னர் மதுரை மா நகரையடைந்தோம். மகாத்மாவைத்தேடி இருப்பிடம் விசாரித்துப் பட்டமார்வீட்டில் சந்தித்தோம். அடிபணிந்து நின்றோம். மகாத்மா தமது

சந்ததியைச்சார்ந்த தமது பேரன்மார்களின் யோகக்ஷேமம் விசாரித்த பின்னர் நாங்கள் வந்த காரணத்தைக் கேட்டார். மகாத்மாவின் ஞாபகார்த்தமாக அவர் தமது உருவப்படம் பெற வந்த செய்தியை விஞ்ஞாபனம் செய்தோம். அது கிடைக்குமிடம் "பொன்னுசாமி பிள்ளை, விளக்குத்தண்டு" என்று மகாத்மா விபரம் தந்து "நான் சொல்லியனுப்பியதாகத் தெரிவி, இரண்டு வைத்திருக்கிறன் கொடுப்பான் வாங்கிவா" என்ருர். அவ்வாறே சென்று அந்த விலாசதாரைச் சந்தித்து மகாத்மாவின் கட்டளையைத் தெரிவித்தோம். உடனுக அவர் உட்சென்று இரண்டு படங்களுடன் வந்து அளித்தார். நண்பர் தமது கையிலிருந்து ஒரு ரூபாயைக் கொடுத்துப் படங்களைப் பெற்ருர். மகாத்மாவின் சந்நதிக்குப் பின்னர் திரும்பினோம். எதிர்பாராவிதமாகப் படங்கள் கிடைத்தமைக்கு மகத்தான உவகை கொண்டோம். மகாத்மாவின் கரத்திலளித்து நமஸ்கரித்தோம். எங்களது உள்ளக் குறிப்பைக் கண்ட மகாத்மா மலர்ந்த முகத்துடன் வாங்கி ஸ்பரிசித்து "சந்தோசம், வைத்துக் கொள்ளுங்கள் க்ஷேம முண்டாகும். போய் வாருங்கள்" என்ருர். நான் இதுவரை பொன்னேபோல் போற்றி வருவதும் சன்னிதியில் தற்காலம் அதனைப் பெரிதாக்கி வைத்துப் பூஜித்து வருவதும் இந்த மகாத்மா தமது திருக்கரத்தாலேயே அன்புடனளித்த அந்த மூர்த்திகரமே தான். அவரது அன்பளிப்பேதான். ஜென்மாந்திரங்களில் செய்த பூர்வ புண்ணியமே உருவெடுத்து எனக்குக் காட்சியளித்து ஆட்கொள்ள வலிய வந்த திருவாய் அன்றுபோலின்றும் ஆராதித்து வருகின்ரும். சன்னிதி நாடிவரும் பக்தர்கள் பலர்க்கும் சாந்நித்யமாய் தரிசனமளித்தும் அநுக்ரஹியா நிற்பர்.

இந்த மகாத்மா கர ஸ்பரிசம் பெற்ற இவ்விரு படங்களையும் தாங்கி ஊர் நோக்கி மீண்டோம். கோடைச் சாலையைக் குறுகினோம். அசுவம் பூட்டிய வண்டியொன்றில் நாங்கள் நால்வர் அமர்ந்து வந்துகொண்டிருந்தோம். ஆறு மைல்கள் கடந்து வந்து ஓர் ஊரையணுகினோம். காடாந்த காரமான இருள் சூழ்ந்திருந்தது. அச்சமயம் சாரதியோ வண்டியை ஓர் குட்டையருகில் நிறுத்திவிட்டுத் தாகம் தீர்க்கச் சென்றுவிட்டான். நேரங் கடந்த வாறிருந்தது. வெகு நாழிகைக் கப்பால் சாரதி தோன்றினான். அவனது ஒவ்வொரு மூச்சுக் காற்றிலும் துர்க்கந்தம் வீசியது. போதை வஸ்துவான கள்ளைக் கண்ட மட்டும் அருந்தியிருந்தான். "ஏனப்பா இன்னேரம்" என்றார் ஒருவர். "தாகத்திற்குச் சாப்பிடப் போயிருந்தேனுங்க. சற்று நாழிகை ஆனால் என்ன? ஒரு வினாடியில் ஊர்கொண்டு சேர்க்கிறேனுங்க. கவலை வேண்டாமுங்க நானாச்சு." என்றான் சாரதி. காலமோ முன்னிருட்டு. வண்டியில் விளக்கோ கிடையாது. அந்த மோர்க்காரி பள்ளமோ மோசமானவிடம். கொலையுங் களவுங் கொள்ளையும் மலிந்தவிடம் அந்தக்காலம். பிரயாணிகளில் சிலர் பெரும் பணம் தாங்கி வருகின்றனர். எங்களுள் யோசனையும் ஒருபக்கம் திகிலும் வாதிக்கிறது. "ஆண்டவனே கதி" யென்று நம்பி ஒருவர் முகம் மற்றவர் காணவியலாத நிலைமையில் ஆண்டவனை வேண்டியிருந்தோம். போதை வஸ்துவை வேணுமட்டும் அருந்திய வண்டியோட்டியோ கண்மண் தெரியாதபடி வண்டியைச் செலுத்தினான். வாயுவேகமும் பின்னிடச் சென்ற வண்டி ஒருபக்கமாய்ச் சாய்ந்து வீழ்ந்தது. காரணமறியாது திகைத்தோம். வண்டியினின்றும் குதித்தோம். ஆங்குச்

சுங்கச் சாவடி யிருந்தது கண்டோம். கையில் விளக் குடன் சுங்கக் காவலன் தோன்றினான். ரஸ்தாவைத் திறந்து வண்டியை நெருங்கினான். சாய்ந்து வீழ்ந்த வண்டியை நெருங்கிய காவலன் கணத்தில் உண்மை யறிந்தான். விளக்கைப் பெற்ற சாரதி சக்கரத்தைத் தேடி நடந்தான். இரண்டு அல்லது மூன்று பர்லாங் தூரம் தேடிச் சென்று ரஸ்தாவுக்குத் தென்புறம சப்பாத் திப் புதரிடை சக்கரத்தைக் கண்டான். உருட்டி வந்து சேர்த்தான். மறுசாவி கொண்டு சக்கரத்தை இணைத்தான். "தான் தாகவிடாய் தீர்க்கச் சென்ற சமயம் எவனோ போக்கிரி வண்டிச் சாவியைக் கழற்றிவிட்டுச் சென்றான் பாருங்கள். சாவியின்றிச் சகடம் மூன்று மைல்கள் ஓட்டத்தில் வந்தது தம்பிரான் புண்ணியந்தான். ஆச்சரி யம். ஆச்சரியம் யாருக்கும் அடிகிடி இல்லாமற் போச்சுது. கடவுளே! கடவுளே!" என்றான் அந்தக் குடிகாரக் குப்பன். இந்தச் சம்பவங்களுக்கிடையே வண்டியின் பின்புறம் ஸ்ரீ குருபடத்தை அணைத்தவாறு அமர்ந்திருந்த எனது முழந்தாள்களில் மோதி உராய்ந்து சென்று உருண்டோடியது. அந்தச் சக்கரமேதான் என்பதையும் சுங்கச் சாவடிக்கருகே வேகம் குறையவே அந்தச் சாவியற்ற சக்கரம் கழன்றோடியது என்றும் பட உருவில் இருந்து எமக்காதரவளித்துக் காத்து யாதோர் அபாயமும் இன்றி வீடு கொண்டு சேர்த்த பெருங் கருணையை நினைந்து அந்தக் கனமிகும் ஸீமானின் உருவப்படத்தைக் கண்ணாடியிலிட்டும் போற்றி இன்றள வும் இணைபிரியாதிருந்து வருகின்றோம். சிறந்த பக்தர் ஸீமான் சுப்ரமண்ய சர்மா பேருதவியால் கிடைக்கப் பெற்று இன்றளவும் அவரது பேரன்பால்

உபாசித்து வருகிறேன். வேண்டியவர் வேண்டியவாறே அனுக்ரஹித்துவரும் பரம கருணாநிதி படத்திலிருந்து பரமோபகாரம் செய்த விந்தைச் சரிதை இதுவாகும். பகவான் ஸ்ரீ குருதேவர் உருவில் தோன்றியும் அருவில் தோன்றாத் துணையாயுமிருந்து பக்தர்க்கருள் பாலிக்கின்றார். அவரது மேலான திருவருளைப் பெற முயல்வதே மானிடப் பேற்றைப் பெற்ற பயனாகும்.

---

# 18. ஸ்ரீ குருபடம்.

ஸ்ரீமான் தக்ஷிணாமூர்த்தி சாஸ்திரிகள் மகாத்மாவின் அன்பிற் சிறந்த பக்தர்களில் ஒருவர். அவர் ஒருசமயம் தமது சிறந்த நண்பரான ஸ்ரீ பஞ்சாக்ஷரக் குருக்களுக்கு மகாத்மாவின் உருவப்படம் ஒன்றை அன்பளிப்பாய் விரும்பியளித்தார். அன்னார், பெரியாரைக் குறித்துத் தம் நண்பர் சொல்லக் கேட்டதைத் தவிர நேரில் கண்டறியார். ஆகவே சாஸ்திரிகள் அளித்த படத்தை மறுத்தலிக்காமல் பெற்றுத் தம் பெட்டிகளுள் ஒன்றில் பத்திரமாய் பொதிந்து வைத்து மறந்தார். அதனைத் தமது பூசனைகளிடையே வைத்துப் போற்றாமலும் சிறிது கற்பூரமேனும் காட்டாமலும் தமது காரிய நிகழ்ச்சிகளில் ஈடுபட்டிருந்தார். அவ்வாறு நாட்கள் பல வாரங்களாக வும், மாதங்களாகவும், ஸ்தூலித்து ஓர் அயனமும் கடந்தது. பெட்டகத்துள் நின்ற பெரியார் சித்தாடச் சற்று நினைந் தார். படமளித்த சாஸ்திரிகள் கனவினில் உருவாய்த் தோன்றினார். "அப்பனே, தக்ஷிணாமூர்த்தி! நீ நல்லதே செய்தாய், நானும் அதற்கு உடன்பட்டேன். ஆயினும் பஞ்சாக்ஷரம் பயந்தே போனான். என்னவோ, ஏதோ,

யாரோ, எவரோ, எப்படி இருக்குமோ, பலன் எவ்வாருமோ, என்று எண்ணிப் பெட்டியில் கட்டி வைத்தான். மாதம் ஆறாயிற்று. புழுக்கம் ஒருபக்கம், தாகம் ஒரு பக்கம், வெளியேறத் தவிப்பு ஒருபக்கம், பசிக்கொடுமையோ சொல்லொணாது. இனியேனும் நீயாவது அவனுக்கு எடுத்துரைக்கலாகாதா, படத்தைக் கொடுத்தவுடன் உன் பொறுப்பு நீங்கிற்று. என்ன செய்கிறான், எங்கு வைக்கிறான், எவ்வாறு ஆராதிக்கிறான் என்று எப்போதாவது கவனித்தாயா? சென்று கண்டாயா? நான் என்ன கடும் புலியா, எல்லோர்க்கும் அருள் புரியும் எனது நெஞ்சம் நீ அறியாயா? அவன் பூஜிக்கும் என் தாயுடன் என்னையும் ஓர் சேயாய் ஒரு கற்பூரமேனும் காட்டலாமல்லவா? பெரிய பூஜை, பெரிய பெரிய நிவேதனங்கள் கேட்கிறேனா? படத்தோடு படம், சுவரோடு சுவராகக்கூட இருக்க நான் லாயக்கில்லையா? நீயாவது அவனுக்கு இனியாவது சொல்லப்பா. என் தாகமும் பசியும் எனக்குத் தெரியும். நீ அறியப் போகிறாயா, இந்த விஷயத்தைக் கூட அவனுக்கு எடுத்துச் சொல்ல உனக்கு சங்கோசமும், தாக்ஷண்யமும் கூட ஏற்படத்தான் போகிறது. நீ நமக்கு எவ்வளவோ வேண்டியவன். நீயும் நம்மை அன்பு செய்கிறவன். நம்மை ஆராதிப்பவர்க்கு நாம் எட்டுணையும் தீம்பு நினைவோமா. இனியாவது அவனுக்கு உண்மையை எடுத்துச் சொல்லப்பா" என்று மிக மிக இரங்கிக் கூறியருளினார் பகவான் ஸ்ரீ குழந்தைப் பெரியார். அதிப் பிராதக்காலம், சாஸ்திரியார் கனவு கண்டு விழித்தார். தமது வழக்கம்போல், "அகல்யா, த்ரௌபதா, ஸீதா, தாரா, மண்டோதரீ, பஞ்சகன்யாந் ஸ்மரேந்நித்யம் சர்வ பாபக நாசனம்" என்று பதிவ்ரதாங்கனைகளை ஸ்மரித்து எழுந்தார்.

மாயா பாண்டீஸ்வரி சமேதராக வீற்றிருந்தருளும் சாக்ஷாத் சிவபரம் பொருளைச் சிந்தையில் வந்தித்து நதியை அடுத்து ஸ்நானம் முதலிய நித்திய கடன்களை முடித்தார்.

வீட்டையடுத்துக் கிருகிணியைப் பூஜோபகரணங்களைத் தயாரிக்க உத்திரவிட்டார். வீட்டினின்றும் வெளி வந்தார். உத்தமப் பிர்மசர்யம பூண்ட வேதாத்யயனம் பயிலும் ஓர் அத்தணச் சிறுவனை அணுகினார். அவ்விளைஞனைத் தமது மனையில் உணவுகொள்ளக் கோரிச் சம்மதமும் பெற்றார்.

வீட்டைச் சுத்திசெய்து மெழுகிப் பலவகைப்பட்ட கோலங்களாலலங்கரித்து அவரது தர்மபத்தினி பக்ஷ்ய போக்கியங்களுடன் அறுசுவை உண்டியை ஆக்கி வைத்தாள். இடையே கிருஹஸ்தர் ஸ்ரீமான் சாஸ்திரிகள், பஞ்சாக்ஷரத்திற்கும் அழைப்பு விடுத்தார்.

அப்பால் ஸ்ரீ குழந்தைப் பெரியாரை எண்ணித் தாபித்து அன்புடன் அபிஷேகாதி உபசாரங்களுடன் பூசனை புரிந்தார். கற்பூர ஹாரத்தியுமாகிப் பற்பல ஸ்தோத்திரங்களால், இன்னிசையுடன் பாடிப் பரவசப் பட்டார். அக்கால் பக்தாதீனனான பகவான் ஸ்ரீ குழந்தைப் பெரியார் பிர்மச்ர்யம் பூண்ட சிறுவனிடமாய் அருள்கொண்டு தோன்றினார். ஸ்ரீமான் பஞ்சாக்ஷரத்தைக் கரத்தைப் பற்றினார்.

"ஏனப்பா, பஞ்சாக்ஷரம்! உனக்கு நான்செய்த தீமை என்ன? என்னைப் பெட்டிக்குள் வைத்து மறந்தாயே, நீ பூசிக்கும் தெய்வங்களாக என்னைக் கருதாதிருந்தாயே, அவையெல்லாம் யாமல்லவோ, இந்த எண்ணம் துறந்தாயே, என் தாகத்தையும், பசி வேகத்தையும்

நீயறிந்தாயில்லையே, உன் நண்பனுக்குகந்தவன் உனக்கு மட்டும் நான் வேருமோ - உன் கண்ணுன குழந்தைகளே போல் என்னையும் எண்ணப்பா. நீ ரொம்ப நல்லவனச்சே. பக்திமானென்றும் நானறியேனு, யாரோ சாமியார் படமிது. இது யாரோ, எப்படியோ, பூசைக்கு லாயக்கோ, எந்த ஜாதியோ, ஜனமோ! என்று மிதமாயிருந்து விட்டாயே. உன் நண்பன் சாஸ்திரியையே கேள். அவன் என்னைப் பற்றி உனக்கு நன்கு சொல்லியிருந்தும் இதுவரை என்னை நீ நினைந்தாயில்லையே. உன் செயலை யெல்லாம், இவன் கனவில் இன்று வந்து உணர்த்தி விட்டேன். நீயே நேரில் கேட்டறியப்பா." என்ருர்.

வந்த குழந்தையிடம் அருள்கொண்டு நின்ற தயாநிதி, உணர்த்தியருளிய அவ்வரிய வாசகங்களனைத்தையும் கேட்டுணர்ந்த ஸ்ரீமான் பஞ்சாக்ஷரம் தமது தவறனைத்தையும் ஒப்புக்கொண்டதுடன் சந்நிதியில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துத் தம்மை மன்னிக்கும்படி பன்முறை பிரார்த்தித்துக்கொண்டார்.

அப்பால் அச்சிறுனைத் தக்கதோர் ஆசனத் திருத்திக் குரு தெய்வமாய்ப் பூஜித்து, வஸ்திர கந்தாதி புஷ்பங்களால் அலங்கரித்து அறுசுவை உண்டியும் அருகிருந்து ஆர்வமொடளித்து, பக்தி வினயமாய்ப் பன்முறை உபசரித்தனுப்பினர்.

அப்பால் சாஸ்திரிகள் பஞ்சாக்ஷரத்துடன் பரிவுடனுண்டு, பகவதாக்ஞையை அவர்க்குப் பதிவாய்ப் புகன்று தம்மையும் ஒரு பொருட்டாய் எண்ணித் தப்பைத் திருத்தி தடுத்தாட்கொண்ட தயாசாகரனைப் போற்றியிருந்தார்.

பகவான் ஸ்ரீ குழந்தை, அருள் முகமாய்த் தோன்றி ஆங்குப் பல்லோர் முன்னிலையில் அருளியதையும் தமது அறியாமையால் நேர்ந்த தவற்றையும் மனத்திலுன்னித் தமதில்லம் அடைந்த பக்தர் பஞ்சாக்ஷரம், அப்பால் பெட்டியுள் இருந்த பெரியார் படத்தை எடுத்து ஆசை நேசமாய் அடுத்துப் பூசை புரிவாராயினர்.

அன்பர்களே! பக்தர், படம் பெறுகையில் ஏற்ற மனம் எது? பெட்டியினுள் வைத்த மனம் எது? முகமறியாத இதனைப் பூசித்தால் யாதாகுமோ என்று பயந்த மனம் எது? அப்பால் அருள்கொண்டு செப்பும் திருவருள் விலாசத்தை மகிழ்ந்து புகழ்ந்து ஏற்றமனம் எது? ஆராயில், யாவும் ஆண்டவனது திருவுள்ளமே யல்லவோ. அவரது திருவருளின்றி எவைதான் நடைபெறும். அவர் பக்தர்களிடம் கொண்ட பரம கருணை எவர்தாம் அறியவல்லார். அவரது கட்டளையின்படி யாவும் நடைபெறுகிறதே யல்லாமல் வேறில்லை. யாவும் ஆண்டவனது சித்விலாசச் சிறப்பேயல்லவா. பலவாய் ஒன்றாய் நின்ற மூர்த்திகரம் யாது? யாவும் தாமாந்தன்மை வாய்ந்த ஸ்ரீ குருநாதன் திருமேனியல்லவோ. நிற்க, பூஜைதான் என்ன? பூக்கொண்டு புரிவதுதான் பூஜையா? நிவேதனம் அர்ப்பிப்பது எதனை? இவை யாவற்றிலும் அவர்தாமே நிறைந்திருக்க எவ்வாறு பூசிப்பது? இதனுண்மை அடியில் வருமாறு காண்க :—

"பண்ணேனுனக்கான பூசை யொரு
வடிவிலே — பாவித்திறைஞ்ச வாங்கே —
பார்க்கின்ற மலரூடு நீயேயிருத்தி —
அப்பனி மலர் எடுக்க மனமும் நண்ணேன் —

எனுமலிரு கைதான் குவிக்கவெனில் —
நாளுமென்னுள நிற்றிநீ — நான் கும்
பிடும் போது அரைக்கும்பிடாதலால்
நான் பூஜை செய்ய முறையோ —
விண்ணே விண்ணதியாம் பூதமே — நாதமே —
வேதமே வேதாந்தமே — மேதக்க கேள்வியே
— கேள்வியாம் பூமிக்குள் வித்தே — அவித்தின்
முளையே — கண்ணே கருத்தே — எண் எண்ணே
எழுத்தே — கதிக்கான மோன வடிவே —
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே "

என்றவாறு, அளவிடற்கரிய மாண்புடைய பூஜையை தாயுமானஸ்வாமிகளது திருப்பாடலால் காண்க.

---

# 19. பம்பாய் வாசியின் மாயச்சித்து.

சென்னையில் உள்ள தினமணிப் பத்திரிகாசிப்ரியர் ஸ்ரீமான் கோபாலன் அவர்கள் கிருகத்தை நாடிப் பம்பாயிலிருந்து ஓர் பெரிய மனிதர் வந்து சேர்ந்தார். அவரைச் சந்தித்த கனம் கோபாலன் அவர்கள் அந்தப் பெரிய மனிதர் தாம் கொண்டுவந்த அறிமுகக் கடிதத்தை அவரிடம் சேர்ப்பித்தார். கடிதம் பார்த்த கனம் கோபாலன் அவர்கள் வந்தவரை உபசரித்துத் தமது ஜாகாவில் தங்க அவருக்கு வசதி செய்து கொடுத்தார். சில நாட்கள் தங்கியிருக்கவும் அவர் தமைக் கேட்டுக் கொண்டார்.

அவ்வாறு அதற்குச் சம்மதம் அளித்த அவ்விருந்தினரைத் தமது மாடியறைக்கு அழைத்துச் சென்று இளைப்பாறக் கேட்டுக்கொண்டார். மிகமிகப் பரிசுத்தமாகக் காணப்பட்ட அம்மாடியறையோ மேஜை நாற்காலிகள் வரிசையாகப் போடப் பெற்றுத் தளம் பூவேலைப் பாடுகளால் அலங்கரிக்கப் பெற்ற சலவைக் கற்களால் சமைந்து அழகு பெற்றிருந்தது.

நாற்புரத்தும் சூழ்ந்த மதிற் சுவர்களில் தெய்வ சாந்நித்யம் பெற்ற உருவப்படங்கள் எங்கும் நிறைந்து பக்தி பரவசத்தைப் பயப்பதாகக் காட்சியளித்தது. அவ்வகைத் தேவதா மூர்த்திகளுக்கிடையே வீற்றிருந்த ஓர் சாதுப் பெரியாரின் திவ்ய வடிவம் தாங்கிய ஓர் உருவப்படமும் பலவகைச் சுகந்த புஷ்பங்களாலாகிய மாலையணிந்து சுற்றிலும் சூழ்ந்த வத்தி தூபங்களால் சுவாசனையை எங்கும் பரப்பி பரவசம் செய்தது. வந்த விருந்தினரை ஆங்குள்ள ஓராசனத்தில் அமரச் செய்து அவருக்குக் காலையாகாரமாகச் சூடான காப்பி தருவித்து அளித்து உபசரித்தார் கனம் கோபாலன் அவர்கள். அதனை ஏற்று அருந்தியவாறு வந்தவர் நாற்புறமும் சுற்றி நோக்கினர். மலர்மாலையணிந்து மையமாய் நின்ற மகானைக் குறித்து அடுத்துப் பலவாய் விசாரித்தார்.

கனம் கோபாலன் அவர்களும் அந்தச் சாதுப் பெரியாரைப் பற்றிய மகிமை உண்மைகளைச் சாங்கோபாங்கமாய் விஸ்தரித்துரைத்தார். இதனையாவும் கேட்டிருந்த வந்த பெரியார் மௌனம் தாங்கித் தலையசைத்தார். "அப்படியா? அத்தனை பெரியாரா ஓகோகோ! அவ்வாருயின் நமக்கும் இப்படம்போல் கிடைக்குமாகில்

வீட்டுக்கு ஆர்டர் செய்யுங்கள். எனது பம்பாய் நண்பர் பலர்க்கும் தேவை" என்றார். இதைக் கேட்ட கனம் கோபாலன் அவர்கள் "அவ்வாறாயின் இதனையே காப்பி யெடுத்தும் தரலாம். தங்களுக்கில்லாததா. இப் பெரி யாரின் பேரருள் எவர்க்கும் உரித்தாகட்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்கிறேன். நானே தருகிறேன்" என்றார். வந்த பெரிய மனிதர் "தாங்கள் இதனை எங் ஙனம் பெற்றீர்கள் அறியலாமோ?" என்றார். "ஓகோகோ இதுவா (சற்று யோசித்து, நிதானித்து) இப்பொழுதுதான் ஞாபகம் வருகிறது. பலவாண்டுகட்கு முன்னர் மதுரைக் குச் சென்றிருந்த பொழுது இப்பெரியார் குழந்தைசாமி களது மகோத்ஸவம் அவரது சமாதியில் ஊர்வலம் முதலிய சிறப்புக்களுடன் நடைபெற்றுக்கொண்டிருந்தது. இதனை யாவும் மிக்க பக்தி சிரத்தையுடன் நடாத்தி வரும் தலைமை தாங்கிய செல்வர் ஸ்ரீமான் ராமலிங்கம் என்பவரைப் பற்றி லர் சொல்லக் கேட்டேன். அப்பால் அவர் சமாதி பூசை களிலும் ஈடுபட்டு முயன்றிருந்ததையும் நேரில் கண்டேன். இப்பெரியாரிடம் என்னையுமறியாமலே ஈடுபட்டேன். என்னையறிந்த கனம் ராமலிங்கம் அவர்கள் அளித்த குரு படம்தான் இது. பகவான் ஸ்ரீ முருகேசனது திவ்விய அவதாரம் என்றே இம்மகானைக் கருதி சென்ற பல வருடங்களாக இதனை இங்கு வைத்துப் பூசித்து வரு கிறேன். எல்லோராலும் பேதமின்றிப் போற்றி வணங்கப் படும் இப்பெரியார் இக் குடிலுக்கு வந்த நாள் முதல் ஒரு குறையும் இங்கு கிடையாது," என்றார் கனம் கோபாலன் அவர்கள்.

"ஓகோ அப்படியா! அவ்வாறாயின் ரொம்பவும் நல்லதுதான். நானும் சொந்தக் காரியமாய் மதுரைவரை

செல்லவேண்டியிருக்கிறது. அச் சமயத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ளுகிறேன். பெரியார் சமாதி என்று சொன்னீர்களே அங்கும் சென்று அவசியம் தரிசிக்கத் தவறேன். கனம் ராமலிங்கம் அவர்களையும் நேரில் கண்டு பேசவும் கூடும். என்று நினைக்கிறேன். ஆனால் அவரது விலாசம் அதற்கு அவசியமே." என்றார் வந்த புதியவர், அந்தப் புருஷோத்தமர்.

"ஆகா, நீங்கள் சொல்லுவது ரொம்பவும் சரி. அவரது விலாசமும் தருகிறேன். பிரதி வருஷமும் அவர் எனக்கு அனுப்பும் குரு பூஜைப் பத்திரிகைகளும் இங்குச் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அதில் கண்டவாறு அவர் தமது விலாசத்தைத் தெளிவாக அறியலாம். ஆம் அஃது இதோ இருக்கிறது பாருங்கள். (குரு பூஜைப் பத்திரிகை ஒன்றை வந்த புதியவரிடம் கொடுக்கிறார்.) மேல் விலாசத்தை வாசிக்கிறேன் கேளுங்கள்.

S. ராமலிங்கய்யர்,
டிரஸ்டி,
ஸ்ரீ குழந்தையானந்த மகா சுவாமிகள் தேவஸ்தானம்,
லெட்சுமிநாராயணபுர அக்ரஹாரம், மதுரை."

வந்தவர், "ரொம்ப சந்தோசம், ரொம்ப வந்தனம்; தங்களைத் தேடி வந்ததற்கு இப்பெரியாரின் தரிசனம் கிடைத்தது. நான் பாக்கியசாலிதான். இந்த உபகாரத்தைச் செய்த உங்களை மறக்கவே முடியாது. எனக்கும் என்னைச் சார்ந்த நண்பர்களுக்கும் பெருத்த ஆன்ம லாபம். தங்களுக்கு மிக்க வந்தனம். தங்கள் கைப்பட ஓர் லிகிதமும் அவருக்கு எழுதித் தர கூடுமோ?" என்றார்.

"ஆகா அவ்வாறே லிகிதமும் தருகிறேன். இது என்ன பிரமாதம்" என்றார் கனம் கோபாலன் அவர்கள். "ஆயினும் தாங்கள் சொல்லியபடி மகானின் உருவப் படங்கள் எட்டு மட்டும் அவசியம் எனக்குத் தயார் செய்துவையுங்கள். ஒருவாரத்தில் திரும்ப இங்கு வந்து தங்களிடம் படங்களைப் பெற்றுக்கொண்டு செல்கிறேன்" என்றார் வந்த புதியவர். கனம் கோபாலன் அவர்கள் அவ்வாறே செய்வதாக ஒப்புக்கொண்டு உடனுக எழுதித் தந்து வந்தவரை வழியனுப்பிவிட்டுத் தாமும் தமது காரியா லயம் சென்றார்.

அப்பால் அப்புதியவர் ரெயில் மார்க்கம்தான் பிர யாணம் செய்தாரோ அல்லது சித்தர்கள் பேசும் கமன குளிகை வழியிலேதான் மாயமாய் வந்து மதுரையில் குதித்தாரோ யாமறியோம். கனம் S. ராமலிங்கையரவர் களை மதுரையில் சந்தித்து லிகிதம் தந்தார்.

வந்த புதியவரை கனம் ராமலிங்கம் அவர்கள் ஏற இறங்கப் பார்த்தார். "புதிது முற்றிலும் புதிது. இந்த ஊருக்கே இவர் அந்நியர் போலும்," என்று எண்ணினார். சுமார் நாலரை அடி உயரம், குள்ளமானவரும், கண்டம் முதல் பாதம் வரை நீண்டு தொங்கிய முழுக்கை ஜிப்பா அணிந்திருக்கிறார். மாநிறம், நல்ல உருண்டைமுகம். வசீகரமான தோற்றம். விசாலமான கண்கள். காண் போரை வசீகரிக்கும் கம்பீர நடை. இவை யாவுங் கண்ட செல்வர் ராமலிங்கம் அவர்கள், அவர் தமக்களித்த லிகிதத்தைப் பார்த்துப் படித்தார். ஆகா! தாங்கள் பம்பாயிலிருந்து சென்னை வந்து கனம் கோபாலன் அவர் களைச் சந்தித்து வந்தீர்களா? ரொம்ப சந்தோஷம். நான் என்னாலான உதவிகளனைத்தையும் தங்களுக்குச் செய்யக்

கடமைப்பட்டிருக்கிறேன். தங்கள் உத்தேசம் என்ன? என்றார்.

"இங்கு, ஏதோ குழந்தை என்ற பெரியாரது சமாதி யிருக்கிறதாமே, அதனைத் தாமே கவனித்து வருகிறீர் களாமே. அதனையும் சென்று தரிசித்து இன்னும் மற்று முள்ள தேவாலயங்களையும் பார்த்து பணிந்துவிட்டு முக்கிய மாய்த் தங்களை நட்புக்கொள்ளவும்தான் நானிவ்வளவு தூரம் வந்தது" என்றார், வந்த பெரியவர். "ரொம்ப சந்தோஷம். காலையாகாரம் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு மற்றைக் காரியங்கள், எல்லாம் பிறகு பார்ப்போம். வாருங்கள்" என்றார் கனம் ராமலிங்கம் அவர்கள்.

இருவரும் காப்பி அருந்திய பிறகு தேவியின் திவ்விய சன்னிதியை நாடிச் சென்று தரிசித்தனர். வந்த புதியவர் கோரிய மற்றைய எல்லாவிடங்களையும் நேரில் சென்று கண்டு திரும்பினர். டவுன் பஸ்ஸில் ஏறிச் சென்று மகாத்மாவின் சமாதி தரிசனமும் செய்து மீண்டனர். அப்பால் வந்த புதியவர் கனம் அய்யரவர்களிடம் தமது பம்பாய் நண்பர்களுக்கு அளிக்கும் நிமித்தம் சில உருவப் படங்கள் தமக்குத் தேவை யென்பதாக அறிவித்தார்.

அவ்வாறே தம் கைவசமுள்ள படங்களில் வேண் டியதைத் தருவதாகக் கனம் ஐயரவர்கள் சொல்லவே வந்த புதியவர் தமக்குக் கொழும்பில் காரியம் இருக்கிற தென்றும் அங்குச் சென்று எட்டு நாட்களில் திரும்புவதா யும்; திரும்புகாலில் மேற்படி படங்களைத் தாமே வந்து பெற்றுக்கொள்வதாயும் சொல்லி விடைபெற்றுக் கொண்டார்.

வந்த புதியவர் சொல்லிய வாரத்தவணையுங் கடந்து அப்பால் மூன்று வாரங்களுங் கூட இரவு பகலாய் உருண் டோடிவிட்டன. ஆயினும் புதியவர் திரும்பி வரக் கண்டபாடில்லை. கனம் ராமலிங்கம் அவர்கள் பெருத்த யோசனையில் ஆழ்ந்தார். கண்மூடிக் கணநேரம் மகாத் மாவைச் சிந்தித்தார். அவரது உயரம், ஆகிருதி, கால் கரங்களமைப்பு, திருமுக விலாசம், நடை நொடி பாவனை, நாசிப் பொடி எடுக்கும் விரல்களின் போக்கு யாவும் இப்போது சிந்தித்துப் பார்த்தார். வந்தவர் மகாத்மா போலிருக்கிறதே, தவிர போட்ட ஜிப்பாவைக் கழற்று ம்லே நடித்துவிட்டு மாயமாயினரே. ஆகா! மோசம் போனோமே. சமாதியில் அடங்கியவர் எங்கெங்கோ சஞ்சரிப்பதாம் காண்கின்றதே. மகாத்மாவோடு வருஷக் கணக்கில் பழகியிருந்தும் நமக்கும் மயக்கம் வந்ததே. இவர் செய்த மாயம் நமக்குப் புரியாமற் போயிற்றே. பம்பாயாம், சென்னையாம், கடிதமாம், நண்பர்களாம், குருபடமாம், என்ன ஜாலம். இவரது மகிமைச் சித்து விளையாட்டை யாரால‌றிய முடியு. கொழும்பில் காரிய மாம. ஆஹாஹா! இந்த மதுரையிலேயே எங்காகினும் கண்காணுதபடி சஞ்சரித்துக்கொண்டிருந்தால் நாமென்ன கண்டோம். யார்தான் சொல்ல முடியும்? இவ்வரிய சித்தர் மகானின் அருளினாலன்றி ஒருவர் அவர்தமை அறியப்போமோ? என்று சிந்தனை செய்தவாறு கண் மூடிக் கணநேரம் தியானத்தில் அமர்ந்தார்.

அக்கால் தமக்கே இன்னதென்று புரியாத ஓர்வகை இன்பம். அந்தப் பேரின்பத்திடையே ஆனந்தமயமான நித்திரை மயக்கம். அந்தயோக நித்திரையிடையே பக வான் ஸ்ரீ குருதேவரது திவ்விய தரிசனம். மகாத்மாவின்

பிரசன்னமான அருள் வாக்கு உதயமாகிறது. "அப்பனே செல்வா ராமலிங்கம், நீ பல காலம் நம்மிடை புரிந்த தொண்டின் பயனாக நாமே வலிய வந்து உன் முன்னர் அவ்வுருவில் காட்சி தந்தோம். அஞ்சற்க. யாம் எங்குமுள்ளோம். பக்தர்கள் பொருட்டு போக்கு வரவும் காட்டுவோம். சமயம் நேர்ந்தால் யாவரையும் ஒன்று கூட்டுவோம். பக்தர்க்கு நமது காட்சி மிக மிக எளிதப்பா. கலங்காதே. கவலாதே. யாமே வந்தோம். யாமே வந்தோம். சம்சயம் வேண்டாம். நீ நினைந்தது யாவும் சரிதான் உங்கள் அனைவரது சுக க்ஷேமங்களும் நம்மதே. அன்பன் கோபாலனுக்கும், நமது அநுக்ரஹம் பூரணமாயுண்டு. அன்பற்கின்பம் அருவிபோற் சொறிவோம்." என நல்லுரை நவின்று நாயகன் மறைந்தான்.

அக்கால் ஒரு சமயம் என்னைச் சந்திக்க நேர்ந்த செல்வர் ராமலிங்கம் அவர்கள் இம் மகிமைச் செய்தியை எனக்கு முரைத்து இறையைத் தொழுது இணக்கம் பேசினர்.

---

## 20. பரதேசிக் கோல பத்திரிகை விளம்பரம்.

கலியுகம் 4968 ஆடுக்குச் சரியான பிரபவ வருஷம் ஆனிமாதம் 32உ ஞாயிற்றுக்கிழமை . திரயோதசி மூல நக்ஷத்திரமும் கூடிய சுபதினத்தில் கும்ப லக்னத்தில் தஞ்சைத் தாலூகா திருவையாற்றிற்கு 7-மைல் தெற்கேயுள்ள மகாராஜபுரம் என்ற கிராமத்தில் ஸ்ரீ வத்ஸ கோத்ரம் லேட் நாணுவையர் என்ற நாராயணய்யருக்கு மூன்றும்

சற்புத்திரனாய் உதித்திருந்த மகா வித்வான் லேட் சுப்ர மணிய அய்யருக்கும், அவர் பாரி லேட் சூப்பச்சியம்மாள் என்ற பார்வதிக்கும், ரெங்கநாதன் என்ற பெயருடைய நான் இரண்டாவது பெண் வயிற்றுப் பேரனாகவும், அவர்களுடைய ஸ்ரீமந்த புத்திரியான நாகம்மாள் என்ற நாகலெக்ஷிமிக்கு நான் இரண்டாவது குமாரனாக மேற்படி மகாராஜபுரம் கிராமத்தில், கொள் பாட்டனார் வீட்டில் ஜனித்து, பிறகு புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சேர்ந்த 10 மைல் மேற்கே குடுமியா மலைக்கு கீழேயுள்ள, பின்னங்குடி அக்ரகாரத்தில், எனது தாயால் வளர்க்கப் பட்டு எனக்கு ஐந்து வயதானவுடன், பின்னங்குடியில் பள்ளிக்கூடம் இல்லாதிருந்ததால் மகாராஜபுரத்தில், என் பாட்டியார் பார்வதி அம்மாளிடம் ஒப்புவிக்கப் பட்டு, அந்தக் கிராமப்படிப்பு முடிந்த காலத்தில், எனது பெற்றோர்கள், பின்னங்குடியை விட்டு, திருச்சிக்கடுத்த நாச்சிக்குரிச்சி மஜரா பொம்ம சமுத்திரம் கிராமத்தில் குடியேறி இருந்தமையால், நான் 4 மைல் தூரம் நடந்து போய், திருச்சி காலேஜ்களிலும், திருவையாற்று உயர் நிலைப்பள்ளியிலும் படித்து மெட்ரிகுலேஷன் பரீக்ஷை தேறி மேற்படிப்பு இல்லாததால், சென்னைக்கடுத்த சைதாப்பேட்டையில் அக்காலம் இருந்த விவசாய காலேஜில் 3 வருஷகாலம் உபகாரச் சம்பள மாணாக் கனாய்ப் படித்து முதல்வனாய்த் தேறி, அப்பால் திருச்சி நேஷனல் ஹைஸ்கூலில், ஆசிரியராக 3 வருஷம் கழித்து, பிறகு புதுக்கோட்டை சமஸ்தானத்தில் விவசாய சூப்ரண் டாக 3 வருஷம் வேலை பார்த்து வருகையில், மேல் அதிகாரிக்கு என்மேலுள்ள அபிப்ராய பேதத்தால் 1906ல் அதனை ராஜினாமா செய்துவிட்டு, கெஞ்சம் ஜில்லா

பெர்ஹாம்பூர் டவுனில் காலியாக இருந்த சமயம் மேற்படி ஜில்லா கோர்ட்டில் கமிஷனராக இருந்துவந்தேன். அந்தக்காலம் 1920-ம் ஆண்டு.

எனது முதல் பார்யை 6-வயது முடிந்த ஓர் குமாரனை விட்டுவிட்டு, நோயினால் காலமாகிவிட்டாள். பாட்டனார் சொற்களை மீற இடமின்றி 2-ம் தாரம் விவாகம் செய்துகொண்டேன். அவளும் 6 மாதம் வயதுடைய ஓர் பெண் மகளை விட்டு விட்டு, காலரவினால் கால்கதியடைந்தாள்.

அப்பெண் குழந்தையும் ஈஸ்வர கிருபையால் வளர்ந்து 9 பிராயம் அடைந்தது. அதன் விவாக விஷயமாகவே, தெற்கு நாடுகளைச் சுற்றிவர எண்ணி, முதல் முதலாகச் சிதம்பரம் வந்து சேர்ந்தேன்.

## அவதூதர் தரிசனம்.

அங்கு தென்னாற்காடு ஜில்லாவைச் சேர்ந்த திருக்கோவிலூருக்கு 8 மைல் தொலைவிலுள்ள, கல்பட்டு கிராமத்தில் வசித்துவந்த, தாய்தந்தையருக்குக் கிருஷ்ண மூர்த்தி என்ற ஓர் சற்புத்திரன் ஜனித்து வளர்ந்து வந்தது. அக் குழந்தை, தன் முன் ஜன்மத்தில் மருடு நாட்டில் பிறந்து, தனவானாய் இருந்தும், தன் பார்யை தனக்கு அனுகூலமின்றி இருந்தமையால், குடும்பத்தை வெறுத்துத் தன் தனத்தையெல்லாம் கோட்டங்கள் கட்டிச் செலவிட்டுவிட்டுச் சிவசாயுஜ்யம் அடையக்கருதி கோரதவம் செய்தனர்.

சிவபெருமான், அவர் தம் தவத்திற்கிரங்கி, வேடரூபமாய்த் தரிசனமும் தந்து, முருகக் கடவுளாய்த் தன்

குமாரனுய்ப் பிர்மசர்யனுய்ப் பிறக்க அருள் புரிந்து பலகாலம் அவருடன் இருந்து பல சித்துக்கள் விளையாடித் தம் சபை சேர அருள் கூறி மறைந்தருளினர். அச் சிவ பெருமான் அருளியவாறு, இந்த ஜன்மத்தில் கலியுகம் 4972 வருஷம் பிரஜோத்பத்தி கார்த்திகை மாதம் 14-ம் தேதி கிருஷ்ணபக்ஷம், பிரதமை, செவ்வாய்க்கிழமை, மிருகசீர்ஷ நக்ஷத்திரம், கூடிய சுபதினத்தில் ரிஷப லக்கினத்தில், தாய்தந்தையர்கள் செய்த தபோ மகிமையால், சிவகுமாரன் என்ற முருகக் கடவுளாய் அவதரித்துத் தன்னை அறியும் பருவம் வந்த காலத்தில், உலக வியவகாரங்களை நீத்து, உபதேசமும் பெற்றுக் குகைகளில் வசித்து, அவதூதனுக மௌனம் பூண்டு, வெளியில் சஞ்சரித்து, இம்மகான் சிதம்பரம் வந்து தங்கியிருந்தனர்.

நான் நடராஜர் தரிசனம் செய்து திரும்பும் சமயமும், இம்மகான் நிஷ்டையினின்று எழுந்த சமயமும் கலந்ததால், அம்மகான் என்னை அழைத்துக் கோவில் கருங்கல்லில் எழுதிக் காட்டி மும்முறை சொல்லும்படி, (மந்த்ரோபதேசம்) உச்சரிக்கச் சொல்லி, அப்பால் தன் ஜாகையாகிய, துரைசாமி அய்யர் வீட்டுத் திண்ணையில், காகிதத்தில் எனக்கு வேண்டிய சில விஷயங்களும் எழுதி அதில் எனக்குச் சிதானந்தன் என்ற பெயரையும் குறிப்பிட்டு என்னிடம் அளித்தார்.

என் பெண்ணின் வரன் விஷயமாய்த் தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில், சுற்றியும் வரன், பொருத்தமாகக் கிடைக்காததால், நான் மதுரை வந்து சேர்ந்தேன்.

## குழந்தை சுவாமிகள் வரலாறு.

அங்கு இங்கிலீஷ் 1627ம் வருஷம் ஏப்ரல் மாதத்திற்குச் சரியான, பிரபவ வருஷம், சித்திரை மாதம், 17-ம் தேதி, வெள்ளிக்கிழமை, ஏகாதசி பூச நக்ஷத்திரம், கூடிய சுபதினத்தில், துலா லக்னத்தில், சிவபெருமான், தான் ஒரு காரணத்தினுல், சிருஷ்டி செய்த ஒரு குழந்தையைத் தனது தொத்து புத்திரனுய் எடுத்துப் பார்வதி தேவி கையில் கொடுத்தவுடன், அம்பாள் இம்மகிமை பொருந்திய குழந்தையைத் தன் இரண்டாவது விநாயகக் கடவுளாய்த் தன் மடியில் அமர்த்தி, ஞானப் பாலும் ஊட்டித் தன் பாலுங்கொடுத்து வந்த காலம் முதல், குழந்தைச் சாமியார் என்று, ஜகம் அறிய நாமம் பூண்டு, அம்பாள் பாலும், பழமும் உண்டு வளர்ந்து, அநேக இடங்கள் சுற்றி, சித்தர்கள் விளையாடிக் கடைசியாக, மதுரையில் தன் தாயார், மீனுள் சன்னதி வந்து சேர்ந்த கொஞ்ச வருஷங்களுக்குப் பிறகு, 1920-ம் வருஷம், என் பெண்ணின் வரனுக்காக, நான் மதுரை வந்த சமயம் இரண்டு மாதங்கள் கழிந்தன. அப்போது மகரிஷிகளான கமலன் மச்சேந்திரன், வசிஷ்டன், விச்வாமித்ரன், அகத்தியன், புலத்தியன், காகன், பதஞ்சலி, முதலிய முனி சிரேஷ்டர்களால் எழுதிப் போடப்பட்ட ஜாதக நூல்கள், இங்கே இருந்து வருகின்றது என்பதும், மகான் குழந்தை, இங்கேயே வசித்துவருகிருர் என்பதும், அறியாமலேயே உலக நிந்தைக்கு பயந்து 1200 ரூபாய் வரை வீணுகச் செலவு செய்துவிட்டேன்.

1920-ம் வருஷம், சித்திரை மாதம், 1-ம் தேதி, மேஷ சங்கிரமமாதலால், பிதுர் தர்ப்பணம் செய்து, தற்காலம் கல்லரைச் சந்து என்று பெயர் வழங்கும்,

சம்மந்தமூர்த்தி தெருவில், வக்கீல் தொழிலில் வசித்து வந்த, எனது மாணாக்கனான S. எக்யசாமி அய்யர் வீட்டில் போஜனம் செய்து, இரவு பலகாரமும் முடித்து, எனது ஜாகாவான கருப்பட்டி சத்திரம் செல்லப் புறப்பட்டேன்.

அச்சமயம் நான் ரஸ்தாவில் இறங்கியபோது சுமார் 30 அடி தூரத்தில் இருந்து ஓர் முதலிச்சியம்மாள் வீட்டுத் திண்ணையில் ஒரு விளக்கும், வாயிலில் கூட்டமும், யாரோ ஒருவருக்கு, ஸ்நானம் செய்துவைப்பதையும் அறிந்து, ஆச்சரியத்துடன், இறங்கின இடம் விட்டு நகராமலேயே இருந்தேன்.

இருட்டில் நின்ற என்னை, ஸ்நானம் செய்து கொண்டிருந்தவர், மும்முறை அழைக்க, நான் அருகில் சென்றேன். நான் அவரை நமஸ்கரிக்க எண்ணியதை, உணர்ந்த அவர், "நான் பிராம்மணன், வடமன்" என்று தன்னை, "நமஸ்காரம் செய்" என்று கட்டளை இட்டதும், சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தேன். அதுவரையிலும், அவர் மகான் குழந்தைசாமி என்று எனக்குத் தெரியாது. நான் எழுந்தவுடன், எனக்கு ஆசிகள் கூறி, என் பெண் விவாக விஷயமாய் வரன்பார்த்து, உடனே முடிக்க வேண்டுமென்றும், அவ்வாறு செய்யாவிடில், அந்தப் பெண்ணை ஞான வித்தாக்கி, உன் காலிலாவது, உனக்கு உபதேசித்து, அந்த அவதூதன் காலிலாவது கட்டிவிடுவேன் என்றும், கலியுகத்தில் விவாகமாகாத பெண்ணை, ஞான வித்தாக்கக் கூடாது என்றும், அப்பால் ஞான வித்தான அப்பெண், பெற்றவனிடம் போய்ச் சேராது என்றும் உடனே வரன் பார்த்து விவாகம் செய்து முடிக்க வேண்டுமென்றும், தன் தாயாகிய மீனலோசனியின்

கட்டளை என்றும், அதனால்தான், இருட்டில் நின்றிருந்த உன்னை, தான் வலிய அழைத்ததென்றும், கூறியருளி, மறுதினம் காலையில், தன்னை வந்து சந்திக்கும்படி, சொல்லி, விடை கொடுக்க நானும் கருப்பட்டி சத்திரம் வந்து சேர்ந்து, இரவெல்லாம் நித்திரையின்றி அம்மகான் யாராக இருக்கக்கூடும், அவரது தாயார் யார் என்று யோசனையில் ஆழ்ந்தவாறு இருந்தேன். அப்பால் 12 மணிக்கு, ரிஷிகள் எழுதி வைத்திருக்கும் ஜாதக நூல்கள் உள்ள, ஆசான் சுந்தர்ராஜ சாஸ்திரியார் வீட்டிற்குள் நுழையக் காரணம் ஏற்பட்டு, என் பெண் ஜாதகமும், கொடுத்து கௌசிகம் ஏடு எடுத்து வாசிக்கும்படி, கூலியும் கொடுத்தேன்.

அந்த ஏட்டை வாசித்த சாஸ்திரியார், என் பெண், ஒரு சித்தன் பெண் என்றும், அந்தப் பெண்ணின் தந்தை யாகிய எனக்குச் சாவு இல்லை என்றும், அவள் கணவனை அடையும் பொருட்டுப் பரங் குன்றில் சாந்தி செய்யும் படிக்கும், தெரிவித்தார்.

அப்பால் எனது ரேகை எடுத்து, என் ஜாதகம் வாசிக்கும்படியும் கூலி கொடுத்ததன் பேரில், என் பெண் ணின் கௌசிக ஏட்டில் உள்ளதும், என் ரேகை ஏட்டில் உள்ளதும் ஒத்திருந்ததால், எனக்கு இந்த நூல்களில் மிகவும் பிடித்தம் ஏற்பட்டு, எனது கௌசிகம், கர்ம காண்டம், காகர் நூல் எடுக்கச்சொல்லிக் கட்டணமும் செலுத்தி, மறுதினம் சந்தேக நிவர்த்திக்காக, மகான் குழந்தை சுவாமிகள் ஜாதகம் இல்லாததால், சாஸ்திரி யாரை உடன் அழைத்துக்கொண்டு, மகானைக் கண்டேன். மகானும், தமது கைகளைக் காட்டினார். அந்த ரேகைப் பெயருள்ள ஏட்டை, அதை அந்த ஆசான் வாசித்ததும், இம்மகானின் தாயார், இக்கலியுகத்தில், பிரத்யக்ஷமாக

மதுரையில் விளங்கி வரும் ஸ்ரீ மீனாக்ஷியம்மாள் என்றும், தெரிந்துகொண்டேன். இதன் மூலம் மகானின் ஜாதகமும் என்னால் வெளியாயிற்று.

மகானை மற்றொரு சமயம், கல்லரைச் சந்தில் சந்தித்த போது, முதலிச்சி அம்மாளைப் பால் கொண்டு வரச் சொல்லி, அதனை ஆசீர்வதித்துக் கொடுக்க அந்த ஞானப் பாலை, என்னை குடிக்கும்படி செய்தார். இவற்றையெல்லாம் எண்ணும்போது, அவரது அன்புடைய குமாரனாக, என்னை பாவித்ததாக, எண்ணவேண்டியிருக்கிறது.

மகாத்மாவினுடையவும், என்னுடையவு காகர் நூல், வாசித்துப் பார்த்த அளவில், அம்மகானும் நானும் வேறல்ல என்று எழுதியிருப்பதோடு, அக்குழந்தை மகானால், ஞானப்பாலும் உதவுா என்றும் கண்டிருந்தது.

## பெண்ணின் விவாகம்.

அப்பால் நான் இல்லாமலே என் பெண்ணுக்கு விவாக விஷயமாய் முயற்சி எடுத்துத் தேடியடைந்து மதுரையில் அந்த வரனுக்கு சர்வ தோஷங்களையும் நிவர்த்தி செய்து தீர்க்காயுளும் கொடுத்துப் பணத்தைச் செலவிட்டு நிச்சயதார்த்தம் முதல், தன் தாயின் உருவாய் திருமங்கல்யமும், பவுன் வாங்கி, ஆபரணங்களும் தட்டானைத் தருவித்துச் செய்வித்து விவாக காலத்தில் சோமன் புடவையாவும் வருவித்து, பக்தகோடிகள் அறியத் தன் பெயராலேயே, பந்துமித்திரர்களுக்குப் பத்திரிகைகளும் விடுத்து, மாப்பிள்ளைக்குச் சந்தனமும் பூசி புஷ்பமும் தன் கையாலேயே சூட்டி, மங்களகரமாக முடித்து

மணமக்களை ஆசீர்வதித்தார். இம் மகான் என்னிடம் நேரில் வெளியிட்டிருந்த விஷயங்களிலிருந்தும், நான் இல்லாத காலத்தில், அவர் தெரியப்படுத்தியிருந்த சமாசாரங்களிலிருந்தும், கவனித்துப் பார்த்தால், அவர் என்னை 1920-ம் ஆண்டு முதல் தன் பிள்ளையாகவே நடத்தி வந்திருக்கிறார், என்று திண்ணமாக நிச்சயிக்க வேண்டியிருக்கிறது.

இது இப்படியிருக்க அவதூதாளையும், ஸ்ரீ குழந்தை மகானையும், நான் விலைக்கு வாங்கிக்கொண்ட காரணத்தால், அதிக தரித்திரத்திற்குள்ளாகி, அவர்களைப் பார்க்க முடியாமல் போய்விட்டது. மகா தரித்திரத்தினால் அதிக கஷ்டத்திற்குள்ளானபோதிலும், நான் நீதி வழுவாதிருக்கும் பொருட்டு, ஒரு பக்கம் பேசும விநாயகக் கடவுளாய், அவதரித்திருக்கும் குழந்தை மகானும், மற்றொரு பக்கம் முருகக் கடவுளாய் அவதரித்திருக்கும், ஸ்ரீ சுயம்பிரகாச பிர்மேந்திர சரஸ்வதி அவதூத ஸ்வாமியும் பாதுகாத்து வந்தார்கள் என்பது எனக்கே தெரிந்த விஷயம். இதற்கு நிதர்சனம் யாதென்றால், என் பேத்தி விவாக விஷயமாய் நான் வரவழைத்த அவள் கர்மகாண்ட நூலில், மகான்கள் என்னை, அதிக தரித்திரத்தினால், பிச்சை எடுக்கும்படி செய்தும், என் பக்தி குறையவில்லை என்று அதில் எழுதியிருப்பதைப்பார்த்து, நான் மிகவும் சந்தோஷித்தேன்.

1926 அக்டோபர் கடைசியில் அரந்தாங்கியில், மகான் குழந்தை, செட்டிகளோடு போயிருந்த காலத்தில், மகானைச் சந்தித்து, மதுரையிலேயே ஸ்திரமாய் இருப்பது நலம் என்றும், வெகு தூரத்திலிருந்து தேடி வருபவர்கள், தரிசனம் செய்வது சுலபமாய் இருக்குமென்றும், அப்படி

யில்லாவிடில், சர்வ ஜனங்களும் அறிய இறந்ததாய் ஒரு பொய்ச் சமாது காட்டி, வடதேசம் போய் இருப்பது நலம் என்றும் சொல்ல, அவ்வாறே சில வருஷங்களுக்குள், குழந்தை மகான், மதுரையில் இறந்துசமாதடக்கமான தாக, நியூஸ் பத்திரிகைகளில் வெளியாகி இருப்பதாக, விசாக பட்டணத்தில், எனக்கு ஒரு நண்பன் தெரிவிக்க, அது செய்தி கேட்ட நான், வடக்கே எந்த இடத்திற்குப் போயிருக்கக் கூடும், என்ற எண்ணமும், அதனை அறிய, மகானின் பாக்கி நூல்கள், கருமகாண்டம் முதலியவை களைப் பிச்சை எடுத்தாவது கூலியனுப்பி, ஆசானிட மிருந்து அந்த நூல்களை வரவழைத்துப் பார்க்க, மிகவும் தாபத்தோடிருந்தேன்.

இதே மாதிரி பிச்சை எடுத்து, என் குருநாதன் அவ தூதனுடைய சரித்திரமும் அறிய, வெகுநாளாய் எண்ணியு மிருந்தேன். காலம் வந்தால், எல்லா எண்ணங்களும நிறைவேறும் என்றபடி என் பேத்தியின், செவ்வாய்த் தோஷ நிவர்த்தி செய்துவைத்து, அந்த நூலில் சொல்லிய வாறு, நான் மதுரை செல்ல வேண்டியதாயிற்று.

எனது கல்கத்தா நண்பர் ஒருவர், இது கேட்டுத் தான் 40 ரூபாய் தருவதாயும், தன்னுடைய ரயில்வே பாஸிலேயே சேலம வரை செல்லலாம என்றும், எனது நண்பர் S. ராமையருடன், 40 ரூபாயும் பெற்றுச் சேந்த மங்கலம் வந்து, என் குருநாதன் அவ தூதனையும் தரிசித் தோம். அப்பால் நான் மட்டும அங்கு 2 தினங்கள் தங்கி, இந்த மகானின் ஜாதகக் குறிப்புகளும் பெற்று, 3-10-38ல் பஸ் மூலமாய், திருச்சி மார்க்கமாய் மதுரையை அடைந்து, குழந்தை மகானுடைய, கர்மகாண்ட நூலைத்

தேடி எடுத்து, அதற்குச் சொற்பக் கூலியும் கொடுத்து, அவர் வாசித்துக் காட்ட நான் அறிந்த உண்மையானது என்னவெனில்,

எனது காகர் நூல் மேல் பாகத்தில் 6-வது பாட்டிலிருந்து, குழந்தை மகானும் நானும் வேறல்லவென்றும், மகானது கர்மகாண்ட நூலிலும், அவ்வாறே இருப்பதை, அகத்தியர் எழுதிப் போட்டிருப்பதையும், நூலின் இறுதியில், நான் உடனுக்கப் பற்றுக்களை ஒழித்துவிட்டு, அக்குழந்தை மகானைப் போல், பரதேசிக் கோலம் பூண்டு வெளிப்பட வேண்டுமென்றும், அகர்த்தியர் கட்டளையைப் படிக்கக் கேட்டு, ஆனந்தமடைந்து, அக்கணமே என் பற்றுக்களையெல்லாம், அம்மகானின் பேரில் போட்டுவிட்டு கவலையற்று, குதூகலங்கொண்டு, என் மனம் சந்தோஷத்தினால் பூரித்து, தீபாவளி அமாவாசை தாண்டின கலியுகம் 5039-ம் வருஷத்திற்குச் சரியான, வெகுதான்ய வருஷம ஐப்பசி மாதம 12-ம தேதி வெள்ளிக்கிழமை, பஞ்சமி மூல நக்ஷத்திரத்திற்குச் சரியான, இங்கிலீஷ் 1938 அக்டோபர் 28-ம் தேதி காலை உதயம 7-மணிக்குள், துலா லக்னத்தில், உலகத்தாருக்குப் பொய்யாக அடக்கம் காட்டிக் கரையும் தாண்டி, அப்பால் சித்துக்கள் விளையாடிக் கொண்டிருக்கும, குழந்தை மகான், அசேதனனாகிய என்னைத் தன்னோடு சமமாக ஆதரித்துக் கொண்டு வந்திருந்த குழந்தை மகான், உலகத்தாருக்குத் தமது சமாதி அடக்கம் காட்டி, என் விஷயம் இதுவரை வெளிப்படாமல் இருந்ததை, இப்பொழுது என்னைத் தன் ஸ்தானத்தில் இருந்து நடந்துவரும்படிக்கு, அகத்தியர் நூலின் மூலமாகத் தெரிவிக்கும்படி அனுக்கிர

கித்து, மேற்படி இலக்கினத்தில் குழந்தை மகானைப் போல் (பரதேசிக் கோலமாக), மதுரைப் பட்டணத்தைச் சார்ந்த கோச்சடையில், உலகத்தாருக்குக் காட்டின, அக்குழந்தை மகான் சமாதியிடத்தில், அடைவதாக நிச்சயித்திருப்பதால், மகரிஷி அகத்தியரால் ஆக்ஞையிடப் பட்டுப் பரதேசிக் கோலமான என்னைக் கனப்படுத்துமாறு வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

மதுரை மாநகர், 17—10—38. } பர்ஹாம்பூர் தாதாவான, விதேயன், G. S. ரெங்கநாத சர்மா.

N. B: இம்மகானது கைப்பட வெளிவந்த பரதேசிக் கோலப் பிரகடனப் பத்திரிகை மூலம், வெளியாகிய இந்த உண்மையை கனம் B. R. மகாலிங்க சர்மா அவர்கள், என்னிடம் அளித்துப் பார்க்கச் செய்தார். 16—2—57ல் ஓம் தத் ஸத்.

---

## 21. ஸ்ரீ சுப்ரமண்ய யந்த்ரம்.

ஒரு சமயம் குழந்தைமா நகரம் சென்று எனது நண்பர் ஒருவரை, ஓர் ஆலயத்தில் சந்தித்தேன். அவர் அந்த ஆலயத்திய பரம்பரை ஸ்தானீகராவர். ஸ்வாமி தரிசனம் செய்து வருகையில் அம்பாள் சன்னிதியில் ஓர் சுப்ரமண்ய யந்த்ரம் கண்டேன். அதனைப்பற்றி விசாரித்த காலையில் அவர் வேறேதும் சொல்லாது எடுத்துச் சென்று வைத்துப் பூஜிக்கும்படி எனது கரத்திலளித்து விட்டார்.

எனது சக்ரோபாசனை பற்றியும் முருகன் எனது ஆராதனை தெய்வம் என்பதும் நண்பர் நாகசுப்ரமண்ய பட்டர் நன்கு அறிந்திருக்கிறார்.

இவ்வாறு இவர் அளித்த யந்த்ரம் ஒரு பக்கம் ஸ்ரீ வள்ளி தேவசேனை சமேதராக ஸுப்ரமண்ய ஸ்வரூபமும் மறுபக்கம் ஷட்கோண யந்த்ரத்துடன் கூடிய ஷடாக்ஷரமும் நிறைந்திருந்தது. ஓர் தாமிரத் தகட்டில் இத்தனை அபூர்வமான வேலைப்பாடுகளைச் செய்யவல்ல ஒருவர் அவனருள் தாங்கியே அமைத்திருக்க வேண்டும் இந்தச் சித்திரக் கலையை என்றே முடிவு செய்ய வேண்டும்.

இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி தரரான மூவரின் எழில் உரு, பார்க்கப் பார்க்கத் தெவிட்டாது. எப்போதும் நிலையான ஓர் இடத்தில், மனங் கடந்த நிலையில், நமமை வைத்து ஆண்டருளும, தேவிமாரின் கனிந்த கருணை விழியோ ஜன்ம சாபல்யத்திற்கு அனுக்கிரகமாகவே அமையும.

அவர் தம் கரத்தில் தரித்த வெற்றி வேலும், அவர் தாம், மயில் மீதமர்ந்திருக்கும் விசித்திரமான தோற்றமும், உலகினர்க்கு எத்தனையோ உண்மைகளை இன்னமும் விளக்குகின்றது. இம்மாதிரி ஒரு மூர்த்தி, எழு பிறப்பிலும் தவம் செய்தாலும் ஒருவர்க்குக் கிட்டுதல் அரிதிலும் அரிது.

சக்கரத்தை நண்பரிடமிருந்து ஸ்வீகரித்து ஆண்டுள்ள எனது தமயனார் கிருகத்தை நாடி நடந்தேன். பகல் பன்னிரண்டு மணி. பசியோ எனக்கு மிகவும்

அதிகமாக இருந்தது. மதினியாரைக் கூவி, எனக்கு அன்னம் பரிமாறும்படி கேட்டேன்.

ஆனால் மதினியரோ கவலை மனத்தராய் வெகு விரக்தியுடன், "போடா போ இங்கே நான் கிடந்து பறி கொடுத்துவிட்டுத் தேடித் தேடி அகப்படாமெ தவிக்கிறேன். இப்பவந்து சாதம் கீதம் என்கிறியே" என்றாள்.

"என்ன மன்னீ பசிக்கிறது சாதம்போடு என்றால், என்ன என்ன எல்லாமோ சொல்லுகிறாயே, அப்படி உனக்கு என்ன கவலை வந்தது, அப்படி எதைப் பறி கொடுத்தே, தோப்பு, துரவு பங்களா வாழ்க்கை, ஆளு, பேரு, வரவு எதிலே உனக்குக் குறை ஒரு வயிற்றுச் சோறு கூடவா பஞ்சமாப் போச்சு." என்றேன் நான்.

"அதுக்குச் சொல்லல்லேடா நானிப்போ, இன்னிக்கி வெள்ளிக்கிழமையில்லியா, நானாக எல்லாத்தையும கழட்டி வச்சுட்டு ஸ்நானம பண்ணப் போனேன். திரும்ப எடுத்துப் பார்க்கிறேன், மூக்குப் பொட்டு மட்டும் காணோம. காலேலிருந்து இதுவரை தேடியாச்சு. எங்கும், தெம்படல்லே. வேலையே ஓடல்லே இதுதாண்டா சங்கதி," என்றாள்.

"ஓஹோ மன்னி இதுதானா சங்கதி ஒரு அற்ப மூக்குத்திக்கா இவ்வளவு தவிப்பு, விட்டுத் தள்ளு. கடையிலே ஒண்ணு வாங்கினாப் போகுது. கவலைப் படாதே. இலையைப் போடு. பசிக்கிறது. சாப்பிட்டதும் நானும் உனக்கு ஒத்தாசையா தேடலாமோல்லியோ," என்றேன்.

"இதனைக் கேட்ட மதினியார் நீ சொன்னமாதிரி, அது சாமான்ய மூக்குத்தியில்லேடா, அது தனி வைரம்.

அசல் வைர மூக்குத்தி. உயர்ந்த விலே, விலே அற்ப சொற்பம் என்று எண்ணுதே. அதுதான் காணுமல் போயிற்று. நீ லேசாக நினைத்து என்னன்னமோ பேசி றியே," என்ருள்.

"ஓஹோ மன்னீ அப்படியா இதோபார், இந்த முருகன் யந்த்ரம். இப்போது உன் வீடு தேடி வந்திருக்கிறது. இந்த மூர்த்தியின் சக்திப் பிரபாவத்தை, நாம் எல்லோரும் அறிய, அரியதோர் சந்தர்ப்பம் இப்போது வாய்த்திருக் கிறது. தேடுவோம் வா. நீ வைத்த இடம் எது. யார் யார் அங்கு வந்தனர். விபரமாய்ச் சொல். குப்பைகளேக் கூட்டி எங்கே கொட்டுவது. எல்லா வற்றையும் கண்போம் வா," என்றேன்.

மதினியார் குறிப்பிட்டவாறு வீடு முற்றிலும் தேடி யும் தென்படவில்லே. இறுதியில் குப்பை கொட்டு மிடத்தை நாடினேம். அச்சமயம் அவ்வீடு சுத்தம் செய்யும், ஓர் இளம் பெண், அந்தக் குறிப்பிட்ட மூக் குத்தியையே மதினி உத்திரவுப்படி தேடிக் காணக் குப்பையைக் கிளறுவதுபோல் பாசாங்கு செய்து கொண்டிருந்தாள்.

சில நிமிஷங்கள் நின்று கவனித்த நான், மனதில் தோன்றிய ஓர் எண்ணத்தால், அப் பெண்பாலே விளித்துக் கூட வரும்படி வீட்டினுள் இட்டுச் சென்று, மதினியா ரிடம், அவள் உடுத்தியுள்ள சேலேயினுள் 3-ம் சுற்றில், ஓர் பொட்டலத்தில், அந்த மூக்குத்தி மறைத்து வைக்கப் பட்டிருப்பதை, எல்லோர் முன்னிலேயிலும் தெரிவித்து, அவிழ்த்துக் காட்டும்படி கேட்டேன்.

இந்த எனது வாசகத்தை, எனது மதினியாரே முதலில் ஏற்காமல், "போடா போ, அப்படி எல்லாம்

அவள் செய்யரவள் இல்லேடா," என்பதாக மறுத்தும் கூறிவிட்டாள்.

வீடுகூட்டியாகிய அந்தப் பெண்ணே, என்னுடன் சண்டைக்கே வந்துவிட்டாள். நானே ஒரே பிடிவாதமாய், "சந்தேகமில்லாவிட்டால், தாராளமாகச் சேலையை அவிழ்த்து, உதறி, உங்கள் எதிரே காட்டுவதில் என்ன பயம்," என்றேன்.

இவ்வாறு அந்தப் பெண்பாலே வெளியே விடாது, அங்கேயே, இடைச் சேலையைத் தளர்த்தி வரும்போது, மதினியார் காண, ஓர் காகிதப் பொட்டலம் கீழே விழுந்ததை, மதினியார் கண்டு, எடுத்து விரித்துக் காணவே, ஆச்சரியத்திலும் ஆச்சரியமாய், அந்த வைர மூக்குத்தியே தான். காணமல்போன பொருள், கருணை முருகன் வருகைக்குச்சாட்சி பகன்றதே போன்று விளங்கியது.

அப்பால் யந்த்ரத்திற்கு திருமஞ்சனம் செய்வித்துப் புஷ்பம் சூட்டி, அர்ச்சித்து எனது கிராமமாகிய வத்தலக்குண்டையடைந்து, எனது கிருகத்தில் வைத்துப் பூஜிக்கலானேன்.

இந்த யந்த்ரத்தின் உண்மைப் பிரபாவத்தை, அதனை ஸ்வீகரித்துவந்த ஆரம்ப காலத்திலேயே கண்ட நான், அப்பால் பல ஆண்டுகளின் அனுபவங்களைக் "குருசரிதம்" என்னும் நூலில் யாவரும் அறிய விளக்கியிருக்கின்றேன்.

இந்த முருகனுடைய அழகிய திரு அவதாரம், ஸ்ரீ குழந்தைப் பெரியாரின் திவ்வியத் திருமேனியேயாம் என்பதே, இதனுள் அடங்கிய உண்மையேயாகும்.

— ஓம் தத். ஸத். —



சில மாதங்கள் வைத்து என்னல் ஆராதிக்கப் பெற்ற இந்த யந்த்ரம், திரும்பவும் அதற்குரியாரிடம் சமர்ப்பிக்கப்பட்டுவிட்டது.

— முற்றிற்று. —

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 30 | 1 | பமகிப்பதியை | பழகிப்பதியை |
| 32 | 8 | தமமை | தம்மை |
| ,, | 20 | தமைக் | தம்மைக் |
| 38 | 1 | அவது | அவரது |
| 50 | 14 | சென்னையில் | சென்னை |
| 61 | 17 | எண்ணைக் | என்னை |
| ,, | 18 | அருட்டிருமேணி | அருட்டிருமேனி |
| 62 | 12 | உத்தாராயனம் | உத்தராயணம் |
| 76 | 16 | பூை | பூஜை |
| 82 | 10 | தாயால் | தாயாள் |
| 83 | 15 | கிருக்கோவிலூருக்கு | திருக்கோவிலூருக்கு |
| 88 | 10 | என்னுடையாவு | என்னுடையவும் |
| ,, | 11 | அம்மகானுள | அம்மகானும் |
| ,, | 13 | உதவு | உதவும் |
| 89 | 24 | செட்டிகளோடு | செட்டியாரோடு |